# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 5 விளைச்சல் : 53 திருவள்ளுவர் ஆண்டு 2055, துலை – அகுதோபர் – 2024







# வேளாண்மைத்துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Agricultural showroom | – | வேளாண் காட்சியறை |
| Agronomist | – | வேளாண் வல்லுநர் |
| Angiosperms | – | மூடுவிதைப் பயிரிகள் |
| Bed irrigation | – | பாத்திப் பாசனம் |
| Bund former | – | வரப்புக் கட்டும் கருவி |
| Catch crop | – | ஊடுபயிர் |
| Chopper | – | கொத்துக் கருவி |
| Collective fruit | – | தொகுப்புக் கனி |
| Commercial crop | – | வணிகப் பயிர் |
| Cropping scheme | – | சாகுபடித் திட்டம் |
| Dibbing | – | விதை ஊன்றுதல் |
| Dry crops | – | புன்செய்ப் பயிர் |
| Dry nursery | – | உலர் நாற்றங்கால் |
| Entomologist | – | பூச்சியியலாளர் |
| Flowering plants | – | பூக்கும் செடிகள் |
| Floating plants | – | மிதக்கும் பயிரிகள் |
| Fruit rot | - | பழ அழுகல் நோய் |
| Gymnosperms | – | திறந்த விதைப் பயிரிகள் |
| Grass agriculture | – | புல் வேளாண்மை |
| Grass hopper | – | வெட்டுக்கிளி |
| Grazing land | – | மேய்ச்சல் நிலம் |
| Hedge plants | – | வேலிச் செடிகள் |
| Hydrophytes | – | நீர்ப் பயிரிகள் |
| Lawn mower | – | திடல் சமனி |
| Levelling board | – | பரம்புப் பலகை |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2055, துலை (ஐப்பசி)
அகுதோபர் – 2024

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | திருமதி க. பவானி<br>இயக்குநர் (மு.கூ.பொ.) |
| பொறுப்பாசிரியர் | : | முனைவர் வே. கார்த்திக் |
| இதழ்க்குழு | : | திரு. கி. இராமர்<br>திரு. ஏ. காந்தி<br>திருமதி. க. கத்தூரி |



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

# சொற்குவை வலைத்தளத்தை அனைவரும் பயன்படுத்த வேண்டும்

## அமைச்சர் திரு.மு.பெ. சாமிநாதன் அவர்கள் வலியுறுத்தல்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சொற்குவை வலைத்தளத்தை விரைவான சொல் தேடலுடன் அரசு தளத்தில் (sorkuvai.tn.gov.in) மாண்புமிகு தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அமைச்சர் திரு. மு.பெ. சாமிநாதன் அவர்கள் 08.10.2024ஆம் நாள் தொடங்கி வைத்துச் சிறப்பித்தார்.

இதையடுத்துச் சிறப்புரையாற்றிய அமைச்சர் அவர்கள், "தமிழ்மொழிக்குப் பெருமை சேர்ப்பது அதன் சொல்வளமே ஆகும். அறிவியல், தொழில்நுட்பம் உள்ளிட்ட கல்விப்புலத்தில் உள்ள – 600–க்கும் மேற்பட்ட துறைகளில் புழங்கும் கலைச்சொற்களை யெல்லாம் திரட்டி அவற்றுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வடிவமைத்து இணைய தளத்தின் பொதுவெளியில் வெளியிடுவதற்கான சொற்குவை தளம் 2019–ஆம் ஆண்டுதொடங்கப்பட்டது.

தொடக்கத்தில் இந்த தளத்தின் மூன்று இலட்சம் கலைச்சொற்கள் மட்டுமே இருந்த நிலையில், தமிழ் வளர்ச்சி மற்றும் அகரமுதலி இயக்ககம் மேற்கொண்ட முயற்சிகளின் காரணமாக அந்த எண்ணிக்கை தற்போது 15 இலட்சத்து 33,669-ஆக அதிகரித்திருக்கிறது. தற்போது தரம் உயர்த்தப்பட்ட சொற்குவை தளத்தை மொழி வளர்ச்சியில் பெரும் அக்கறை கொண்ட தமிழறிஞர்கள், தமிழ் ஆர்வலர்கள், மாணவர்கள் என அனைவரும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்" என்றார்.

நிகழ்வின்போது, தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் நிகழாண்டு அம்பேத்கர், பெரியார், அண்ணா, கருணாநிதி ஆகியோரது பிறந்தநாளை முன்னிட்டு சென்னை மாவட்டத்தைச் சேர்ந்த பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கான பேச்சுப் போட்டிகளில் முதல் மூன்று இடங்களைப் பிடித்தவர்கள், சிறப்பு பரிசுகளுக்குத் தேர்வு செய்யப்பட்டவர்கள் என 96 மாணவர்களுக்கு மொத்தம் ரூ.2.88 இலட்சம் ரொக்கப்பரிசுகள், பாராட்டுச் சான்றிதழ் ஆகியவற்றையும் அமைச்சர் அவர்கள் வழங்கிப் பாராட்டுத் தெரிவித்தார்.

தொடர்ந்து தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் ந.அருள் பேசுகையில், "மாணவர்களின் படைப்பாற்றலை வளர்ப்பதற்காகத் தமிழ்மொழி இலக்கியத் திறனறித் தேர்வு, திருக்குறள் முற்றோதல், கவிதை, பேச்சு உள்ளிட்ட போட்டிகள் எனப் பலசெயல்பாடுகளைத் தமிழ் வளர்ச்சித்துறை மேற்கொண்டு வருகிறது. இவற்றில் அதிகளவிலான மாணவர்கள் பங்கேற்றுத் தங்களது திறமையை வெளிப்படுத்த வேண்டும்" என்றார்.

இந்த நிகழ்ச்சியில் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறைச் செயலர் வே.ராஜாராமன், அகரமுதலித் திட்ட இயக்குநர் பவானி, கார்க்கி ஆராய்ச்சி நிறுவனத்தின் நிறுவனர் மதன் கார்க்கி, அகரமுதலி இயக்கக அலுவலர்கள் மற்றும் பணியாளர்கள் உள்பட பலர் கலந்து கொண்டனர்.

# திருக்குறளில் இயைபுத் தொடை

## (தொடர்ச்சி)



புலவர் வெற்றியழகன்
தலைவர்,
தொல்காப்பியர் தமிழ்ச்சங்கம், சென்னை

நயனிலன் என்பது சொல்லும் பயனில (193)

நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப் (194)

பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த (199)

தீயவை தீய பயத்தலால் தீயவை (202)

தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால (206)

எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை (207)

நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப் (234)

வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா (239)

வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய (240)

அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம் (241)

நல்லாற்றான் நாடி அருளாள்க பல்லாற்றான் (242)

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த (243)

பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்ப அருள்நீங்கி (246)

அருளில்லார்க்(கு) அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்(கு) (247)

பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார் (248)

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை அருளாட்சி (252)

தவமறைந்(து) அல்லவை செய்தல் புதல்மறைந்து (274)

புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி (277)

களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண் (284)

அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப் (285)

அளவின்கண் நின்றொழுக லாற்றார் களவின்கண் (286)

களவென்னும் காரறி வாண்மை அளவென்னும் (287)

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல (289)

கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத் (290)

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு (295)

பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை (296)

புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை (298)

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்து (301)

சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும் (306)

கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா (312)

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம் (317)

நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலையஞ்சிக் (325)

கொலைவினையர் ஆகிய மாக்கள் புலைவினையர் (329)

உயிருடம்பின் நீக்கியார் என்ப செயிருடம்பின் (330)

அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும் (343)

இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி (352)

ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின் (353)

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் (355)

பிறப்பென்னும் பேதைமை நீங்கிச் சிறப்பென்னும் (358)

அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை (367)

இருவே(று) உலகத் தியற்கை திருவேறு (374)

நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால் (379)

இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால் (387)

செவியுணவின் கேள்வி உடையார் அவியுணவின் (413)

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும் (416)

பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்து (417)

நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய (419)

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் (423)

அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது (428)

தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக் (433)

குற்றமே காக்க பொருளாகக் குற்றமே (434)

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர் (435)

பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும் (438)

வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க (439)

மனத்தானாம் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானாம் (453)

மனந்தூயாரக்(கு) எச்சம்நன் றாகும் இனந்தூயார்க்(கு)(456)

மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம் (457)

செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க (466)

பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும் (481)

ஞாலம் கருதினுங் கைகூடும் காலம் (484)

அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை (497)

சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான் (498)

எனைவகையால் தேறியக் கண்ணும் வினைவகையால் (514)

விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா (522)

இறந்த வெகுளியின் தீதே சிறந்த (531)

இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை (536)

கொலைமேற்கொண்(டு) ஆரின் கொடிதே
அலைமேற்கொண்டு (551)

முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி (559)

கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம் (566)

இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச் (568)

பண்ணென்னாம் பாடற் கியைபின்றேல் கண்ணென்னாம் (573)

மண்ணோ(டு) இயைந்த மரத்தனையர் கண்ணோ(டு) (576)

ஆக்கம் இழந்தோமென் றல்லாவார் ஊக்கம் (593)

குடியென்னும் குன்றா விளக்கம் மடியென்னும் (601)

குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து (604)

படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடியுடையார் (606)

இடிபுரிந்(து) எள்ளுஞ்சொல் கேட்பர் மடிபுரிந்து (607)

அற்றேமென்(று) அல்லற் படுபவோ பெற்றேமென்(று) (626)

இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள் (629)

மதிநுட்பம் நூலோ டுடையார்க்(கு) அதிநுட்பம் (636)

நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம் (641)

துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம் (651)

வினைத்திட்பம் என்ப தொருவன் மனத்திட்பம் (661)

கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது (668)

எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம் (670)

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க (672)

செய்வினை செய்வான் செயல்முறை அவ்வினை (677)

நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள் (683)

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி (685)

கடனறிந்து காலங் கருதி இடனறிந்து (687)

விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம் (689)

முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி (708)

ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன் (714)

பல்லவையுள் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையுள் (719)

வாளோடென் வன்கண்ணர் அல்லார்க்கு நூலோடென் (726)

பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து (727)

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும் (737)

முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப் (748)

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து (749)

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை (752)

அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும் (757)

ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்(கு) எண்பொருள் (760)

உலைவிடத்(து) ஊறஞ்சா வன்கண் தொலைவிடத்துத் (762)

சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும் (769)

கான முயலெய்த அம்பினில் யானை (772)

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும் (783)

உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க (798)

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை (799)

விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையான் (804)

உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது (813)

நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல் (826)

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம் (827)

மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து (829)

அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதின்மை (841)

வெண்மை யெனப்படுவதி யாதெனின் ஒண்மை (844)

பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி (852)

மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல் (857)

இகலானாம் இன்னாத வெல்லாம் நகலானாம் (860)

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான் (865)

நோவற்க நொந்ததறி யார்க்கு மேவற்க (877)

நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும் (881)

மனம்மாணா உட்பகை தோன்றின் இனம்மாணா (884)

உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான் (885)

அரம்பொருத பொன்போலத் தேயுமே உரம்பொருத (888)

ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார் (891)

கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின் (893)

மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார் (901)

அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும் (909)

வரைவிலா மாணிழையார் மென்தோள் புரையிலாப் (919)

உருளாயம் ஓவாது கூறின் பொருளாயம் (933)

பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள்கெடுத்து (938)

நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின் (960)

ஒளியொருவற்(கு) உள்ள வெறுக்கை இளியொருவற்(கு) (971)

நகையுள்ளும் இன்னா திகழ்ச்சி பகையுள்ளும் (995)

குலம்சுடும் கொள்கை பிழைப்பின் நலம்சுடும் (1019)

இன்மையின் இன்னாதி யாதெனின் இன்மையின் (1041)

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள் (1049)

கரப்பிடும்பை இல்லாரைக் காணின் நிரப்பிடும்பை (1056)

இரந்து முயிர்வாழ்தல் வேண்டின் பரந்து (1062)

இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே இடமில்லாக் (1064)

ஆவிற்கு நீரென் றிரப்பின் நாவிற்(கு) (1066)

இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின் (1067)

இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும் (1068)

இரவுஉள்ள உள்ளம் உருகும் கரவுஉள்ள (1069)

பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன் (1083)

இருநோக்(கு) இவளுண்கண் ணுள்ள(து) ஒருநோக்கு (1091)

அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல் (1154)

அரிதாற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப் (1160)

தெரிந்துணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப் (1172)

பெயலாற்றா நீருலர்ந்த உண்கண் உயலாற்றா (1174)

படலாற்றா பைதல் உழக்கும் கடலாற்றாக் (1175)

உழந்துழந்(து) உண்ணீர் அறுக விழைந்திழைந்து (1177)

உவக்காணெம் காதலர் செல்வார் இவக்காணென் (1185)

வாழ்வார்க்கு வானம் பயத்தற்றால் வீழ்வார்க்கு (1192)

நனவினால் நல்கா தவரைக் கனவினால் (1213)

கனவினான் உண்டாகும் காமம் நனவினான் (1214)

நனவினான் கண்டதூஉம் ஆங்கே கனவும்தான் (1215)

நனவினான் நல்காக் கொடியர் கனவினான் (1217)

துஞ்சுங்கால் தோள்மேல ராகி விழிக்குங்கால் (1218)

நனவினால் நல்காரை நோவர் கனவினால் (1219)

நனவினால் நம்நீத்தார் என்பர் கனவினால் (1220)

பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித் (1223)

பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு (1229)

பொருண்மாலை யாளரை உள்ளி மருண்மாலை (1230)

பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித் (1234)

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்தொன்றும் (1241)

பிரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர் (1248)

வருகமன் கொண்கன் ஒருநாள் வருகுவன் (1266)

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல் (1267)

வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து (1268)

பெறினென்னாம் பெற்றக்கால் என்னாம் உறினென்னாம் (1270)

பெரிதாற்றிப் பெட்பக் கலத்தல் அரிதாற்றி (1276)

தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி (1279)

பெண்ணினால் பெண்மை உடைத்தென்ப கண்ணினால் (1280)

தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும் (1282)

காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால் (1286)

மலரினும் மெல்லிது காமம் சிலரதன் (1289)

அவர்நெஞ்சே அவர்க்காதல் வேண்டும் எவன்நெஞ்சே (1291)

ஊடி யவரை உணராமை வாடிய (1304)

நலத்தகை நல்லவர்க்(கு) ஏஎர் புலத்தகை (1305)

வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள் (1317)

ஒரூஉ இயைபுத் தொடையினை இருநூற்று இருபத்தொரு குறள்களில் அமைத்துப் படிக்கச் சுவையாக இருக்கும்பொருட்டும் – நினைவாற்றலை மிகுவிக்கும் பொருட்டும் வாரி வழங்கியுள்ளார். ஒழுக்க நெறி வள்ளலும் ஒப்பற்ற இலக்கணப் பேராசானும் ஆகிய திருவள்ளுவர் பெருமான்.

### 5. கூழை இயைபுத் தொடை

கூழை இயைபு என்பது – ஓரடியின் – இறுதியில் உள்ள முதற் சீரிலும் – அடியின் இறுதியிலிருந்து இரண்டாவது சீரிலும் இறுதியிலிருந்து மூன்றாவது சீரிலும் இயைபு அமைந்திருத்தலாகும்.

(எ.டு.) திருக்குறள் அறமே! அறமே! அறமே!

### திருக்குறளில் கூழை இயைபுத் தொடை

உலகில் முதன்முதலாக உலக மக்கள் அனைவரையும் ஒன்றாகப் பார்த்த ஒப்பற்ற ஒருமைப்பாட்டுப் பேரறிஞர் திருவள்ளுவர் தமது குறளில் கூழை இயைபினை இரண்டு குறள்களில் மட்டுமே அமைத்துள்ளார். அவற்றைப் பார்ப்போமாக.

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம் (411)

உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை (592)

### 6. மேற்கதுவாய் இயைபுத் தொடை

மேற்கதுவாய் இயைபு என்பது – நான்கு சீர்களைக் கொண்ட ஓரடியின் இறுதிச் சீராகிய முதற் சீரிலும் – இறுதியிலிருந்து மூன்றாவது சீரிலும் – நான்காவது சீரிலும் இயைபு அமைந்திருத்தலாகும்.

(எ.டு.) குறளே அறமே ஆழ்ந்த பொருளே!

### திருக்குறளில் மேற்கதுவாய் இயைபுத் தொடை

ஒப்பிலாப் பேரறிஞர் திருவள்ளுவர் தமது வாழ்வியல் சட்ட நெறி நூலாகிய திருக்குறளில் – மேற்கதுவாய் இயைபுத் தொடையினை எவ்வாறு – எத்தனை குறள்களிற் பயன்படுத்தியுள்ளார் என்பதனைப் பார்ப்போமாக.

இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென் (53)

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் (131)

சொல்லுக சொல்லில் பயனுடைய சொல்லற்க (200)

நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார் (320)

மடியை மடியா ஒழுகல் மடியைக் (602)

இடும்பைக்(கு) இடும்பை படுப்பர் இடும்பைக்(கு) (623)

அறநூல் ஆசான் திருவள்ளுவர் தமது திருக்குறளில் – மேற்கதுவாய் இயைபுத் தொடையினை ஆறு குறள்களில் மட்டுமே பயன்படுத்தியுள்ளார்.

7. கீழ்க்கதுவாய் இயைபுத் தொடை

கீழ்க்கதுவாய் இயைபு என்பது – நான்கு சீர்களைக் கொண்ட – ஓரடியினது – இறுதிச் சீர் என்னும் – முதற்சீரிலும் – அதற்கு முன் சீரிலும் – முதற்சீராக நிற்கும் நான்காவது சீரிலும் இயைபு அமைந்திருத்தலாகும்.

(எ.டு.) முப்பால் நூலே நற்பால் பொற்பால்.

திருக்குறளில் கீழ்க்கதுவாய் இயைபுத் தொடை

உலகத்தை ஒன்றாகவும் – உலக மாந்தரினத்தையே ஓரினமாகவும் முதன்முதலாகக் கணித்த பேரறிஞர் திருவள்ளுவர் தாம் யாத்தளித்த திருக்குறளில் – கீழ்க்கதுவாய் இயையினை எவ்வாறு கடைப்பிடித்துள்ளார் – எத்தனை குறள்களில் பயன்படுத்தியுள்ளார் என்பதனைப் பார்ப்போமாக.

உதவி வரைத்தன்(று) உதவி உதவி (105)

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப் (120)

பேதைமை யுள்எல்லாம் பேதைமை காதன்மை (833)

பெருமை பெருமிதம் இன்மை சிறுமை (979)

திருவள்ளுவர் பெருமான் நான்கு குறள்களில் கீழ்க்கதுவாய் இயைபுத் தொடையினைப் பயன்படுத்தியுள்ளார்.

8. முற்றியைபுத் தொடை

முற்றியைபு என்பது நான்கு சீர்களைக் கொண்ட ஓரடியில் அமைந்துள்ள நான்கு சீர்களிலும் இயைபு அமைந்திருத்தலாகும்.

(எ.டு.) குறளே அருளே! குறளே பொருளே!

திருக்குறளில் முற்றியைபுத் தொடை

மாந்தனைப் பிரித்துப் பார்க்காத மாண்புடையார் ஆகிய திருவள்ளுவர் – தாம் யாத்தளித்த திருக்குறளில் ஒரே ஒரு குறளில் மட்டும் முற்று இயைபுத் தொடையினைப் பயன்படுத்தியுள்ளார்; அதனைப் பார்ப்போமாக.

காணாதான் காட்டுவான் தான்காணான் காணாதான் (849)

திருவள்ளுவர் தமது திருக்குறளில் ஒரே ஒரு குறளில் மட்டுமே முற்றியையினைப் பயன்படுத்திச் சுவை கூட்டியுள்ளார் என்பதனை அறிந்து மகிழ்வோமாக.

முடிவுரை

அறநூல் – அறிவு நூல் – வாழ்வியல் நூல் என்று அனைவராலும் பாராட்டப்பெறும் திருக்குறள் இணையிலா இலக்கண நூலுமாகும் என்பதனை நிலைநாட்டும் எனது பெரு முயற்சியில் திருக்குறளில் தொடைநயமும் ஒன்று.

தொடைநயத்தில் – மோனைத் தொடைக்கு அடுத்து இந்த இயைபுத் தொடையும் அணிவகுக்கின்றது.

அடிஇயைபுத் தொடை மட்டும் அமையவில்லை. மற்ற இயைபுத் தொடைகள் கிடைத்தவரையில் இணைத்துள்ளேன்.

தொடர்ந்து மற்ற தொடைகளும் அணிவகுக்கும் என்பதனைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

## மயங்கொலிச் சொற்கள்

**தண்மை**

1.குளிர்ச்சி 2. இன்பம் 3.மென்மை 4.தாழ்வு 5. அறிவின்மை

"தண்மை வெம்மை" (தொல். 11.17)

**தன்மை**

1.குணம் 2.இயல்பு 3.நிலைமை 4.முறை 5.பெருமை

6. ஆற்றல் 7.நன்மை 8.மெய்ம்மை தன்னைக் குறிக்கும் இடம்

"அவன் தன்மை ஏழைத் தன்மையோ இல்லை
தோழி" (கலி. 5521–2)

# பாவாணரும் அவர்தம் சொல்லாய்வும்



முனைவர் இரா.கு.ஆல்துரை
தமிழ்நாட்டரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர்
விருதுபெற்றவர்

### ஆய்வு நோக்கும் கொள்கைப்பிடிப்பும்

ஆய்வு நோக்கு, கொள்கைப்பிடிப்பு ஆகிய இருபெரும் பண்புகளின் உறைவிடமாகத் திகழ்ந்தவர் பாவாணர். ஆய்வுநோக்கு இளம் வயது முதல் உயிர் பிரியும் இறுதிக் காலம்வரை தொடர்ந்து காணப்பட்ட ஒன்று. ஆய்வறிஞருக்கு இது ஓர் எடுத்துக்காட்டு. வகுத்தும் தொகுத்தும் விளக்கும் தன்மை இவருக்கே உரியது எனக் கொள்ளும் வகையில் இவரது ஆய்வுகள் துலங்குகின்றன.

பட்டம், பதவி போன்ற குறுகிய நோக்கங்களுக்காகக் கொள்ளும் ஆய்வு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் முடிவு பெறுவதுண்டு. ஆயின் உண்மை ஆய்வறிஞரின் ஆய்வு இடைவிடாததும் நெட்டிடை யிட்டதும் தம் இறுதிக்காலம் வரை மேற்கொள்ளப் படுவதுமாகவும் இருக்கும். ஐம்பது ஆண்டுக்காலம் இடையீடுபடாமல் தொடர்ந்த ஆய்வு. அதிலும் குறிப்பிடத்தக்க ஒரே பொருள் பற்றிய ஆய்வு – தமிழாய்வு. இதுவன்றோ பாவாணரைத் தமிழ் வேழமாக்கியது.

ஓர் உண்மையான ஆராய்ச்சியாளன் ஒரு நாளும் ஆராயாதிருக்க முடியாது. அவன் ஆராயாவிடினும் அவன் உள்ளம் ஆராயும். அதற்குக் கனவென்றும் நனவென்றும் ஊண்வேளை யென்றும் உறக்க வேளையென்றுமில்லை (பாவாணர் 1968:54) என்று ஓர் ஆராய்ச்சியாளனின் தன்மையை வரையறுத்துக் காட்டினார் பாவாணர். அவரே இவ்வரையறைக்கு உரியவராகவும் திகழ்ந்தார்.

கல்வி வேறு ஆராய்ச்சி வேறு (பாவாணர்.1973:முக.11) என வகைப்படுத்தி, நிறை கல்வியுடன் ஆராய்ச்சி மேற்கொண்டவர் பாவாணர். பாவாணரின் ஆய்வுகள் தனிப்பண்புடையன; மூலத்தன்மை பொருந்தியன; ஆய்வாளர்களை உருவாக்கும் திறமுடையன; ஆர்வத்தைத் தூண்டுவன. அதனாலன்றோ சொல்லாய்வு என்னும் புதுவகை ஆய்வினைத் தமிழுக்கு இவர் அறிமுகப்படுத்தியபோதும் அதனைத் தயக்கம் சிறிதும் இல்லாமல் ஆய்வாளர் பலர் ஏற்றுக்கொண்டனர். இவர்தம் ஆய்வினைக் குறை சொல்வோர் பலர் இவர்தம் ஆய்வினை ஊன்றிப் பார்க்காதவர்கள் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

தனித்தமிழ்க் கொள்கை, தன்மானவுணர்வு, வறுமையிலும் செம்மாப்பு, எதிர்ப்பிலும் மனம் குலையாத உறுதி, ஊக்கம் கிடைக்காத போதும் உறுதிகுன்றா மனநிலை போன்றவற்றில் தம் கொள்கைப் பிடிப்பினைக் காட்டியவர் பாவாணர். அதனாலன்றோ இவர் கொள்கைக் குன்றம் என்று போற்றப்பட்டார்.

கொள்கை குன்றிக் குலைந்துபோன குமுகாயத்தைத் தட்டி எழுப்பினார்; தமிழ்க் குமுகாயத்தின் தனிச்சிறப்பை எடுத்துக் காட்டினார்; மறைப்புண்டு கிடந்த தமிழின் ஏற்றத்தை வெளிச்சமிட்டுக் காட்டினார்.

கொள்கை சில நேரங்களில் பற்றின் காரணமாக அமைவதுண்டு. அவ்வாறாயின் ஒரு பக்கம் சாயும் குற்றத்திற்கு ஆளாவதும் உண்டு. ஆய்பவனும் நானே! ஆய்ந்து கண்ட முடிபினை நடைமுறைப் படுத்துபவனும் நானே! என்று வீறு கொண்டு நின்றவர் பாவாணர்.

"இயற்கை, மென்மை, ஒழுங்கு, வளம் என்னும் திறங்களை ஒருங்கே கொண்டது தமிழ்" (பாவாணர்.1967:முன்.12) எனக் காட்டினார். தம் ஆய்வு தமிழின் தொன்மையைச் செந்தமிழாகக் காட்டியது. தமிழைச் செந்தமிழாகவே நிலைநிறுத்தத் தாமே நடைமுறைப் படுத்தினார்; செந்தமிழிலேயே பேச வேண்டும் என்று சூளிட்டுக் கொண்டார்; வாழ்நாள் இறுதிவரை கடைப்பிடித்தும் காட்டினார்.

### சொல்லாய்வுக் கிலக்கணம்

"மொழியாராய்ச்சியும், நடுநிலை, அஞ்சாமை, தன்னலமின்மை, மொழியறி யவா என்னும் நாற்பண்பும் உடையவரால் தான் வேர்ச்சொற்களைத் தொகுக்க இயலும்" (பாவாணர்.1973. முக.11) என்று சொல்லாய்வாளருக்கு இலக்கணம் வகுத்தவர் பாவாணர். அவ் விலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்தவரும் பாவாணர்.

வாழ்நாள் முழுவதும் வேர்ச்சொல் ஆராய்ச்சியில் மூழ்க்கிக் கிடந்தவர் பாவாணர். தம் வாழ்நாள் ஆராய்ச்சிப் பொருள் தமிழாக அமைந்ததால் வேர்ச்சொல் காண்பதற்கு எளிதாகவும் மிகுதியாகவும்

இடந்தரும் மொழி தமிழ் என்றும், இங்ஙனம் கூறும் நிலைவேறு எம் மொழிக்கும் இல்லை என்றும் வேர்ச்சொல் வழி தமிழின் மிகப் பழங்காலத்து நிலையை உறுதிப்படுத்தித் தர இயல்வதாகியது.

பிளேட்டோ (கி.மு.427–345) சொற்களின் தோற்றத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது, குறிப்பாகப் பொருளுக்கும் அதைக் குறிக்கும் சொல்லுக்கும் இடையே இயல்பாக, தேவையான அடிப்படையில் தொடர்பு உள்ளதா? இல்லை மரபால் ஏற்பட்டதா? என்பதைப் பற்றிச் சொல்லாடுவார். இச் சொல்லாடல் நூறு ஆண்டுகளுக்கு மேல் அறிஞர் பெருமக்களிடையே நடந்து வந்தது.

ஒப்புமை காண்பவர்கள் மொழி இயல்பானது என்றும், அடிப்படையில் ஒழுங்கானது என்றும், ஏரணமுறையில் அமைந்தது என்றும் நம்புகின்றனர். இதை மறுப்பவர் மொழியில் நிலவும் ஒழுங்கற்ற இடங்களை எடுத்துக் காட்டுவர் (புளூம்பீல்டு 1935:4).

பாவாணரது ஆய்வு தமிழ்மொழி இயல்பாகவும் சீராகவும் ஏரண அடிப்படையிலும் வளர்ந்து வந்துள்ள நிலையைக் காட்டிற்று. "தமிழ் இயன்மொழியாதலால், பெரும்பாற் சொற்களின் வேர்வடிவை அல்லது வேருறுப்பை இன்றும் தாங்கி நிற்கின்றது" (பாவாணர்.1973: முக.9) என்று தமிழின் அடிமுடியை இனங்காட்டிய பெருமைக் குரியவர் பாவாணர்.

பொருள், கருத்து, சொல் ஆகிய மூன்றிற்குமிடையே காணும் தொடர்பு தற்செயலானது அன்று. காரணத்துடன் அமைந்தது என்பதே பாவாணரின் சொல்லாய்வு உணர்த்தும் அடிப்படைப் பொருள். "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" எனச் சொன்ன தொல்காப்பியர் கருத்தை மெய்ப்பிக்கவே பாவாணரின் சொல்லாய்வு எழுந்தது எனல் வேண்டும்.

"கருத்து, சொல் ஆகியவற்றைத் தனித் தனியாகப் பிரிப்பது இயலாத ஒன்று. இவை இரண்டனுள் ஒன்றன் துணைகொண்டு மற்றது நிலைகொள்கிறது. கிரேக்க மொழியில் உலோகோசு (logos) (இலத்தீனத்தில் oratio) என்னும் சொல் பேசும் ஆற்றல், கருத்து ஆகிய இரண்டையும் குறிப்பதை, இதை விளக்குவதற்கு எடுத்துக்காட்டுவர்.

மாந்த மனத்திலிருந்து வெளிப்படும் கருத்தில் முதல் புறவடிவமாகச் சொல் விளங்குகிறது. சொல்லே கருத்தின் நிலையான பேணிடமாகவும் விளங்குகிறது." (மாக்கசு முல்லர் 1888:முன்.x)

இக்கால மொழி சொல்வளம் மிக்கதாக இருந்தாலும் அவற்றை விளக்க மிகச் சிறிய அளவு வேர்ச்சொற்கள் போதுமானவை. அதாவது அறப்பழங் காலத்தில், அதுவும் மொழியின் தோற்றக் காலத்தில் மொழியில் மிக மிகக் குறைந்த அளவே சொற்கள் இருந்துள்ளன.

இன்றுள்ள சொற்கள் அனைத்தும் குறைந்த அளவிலான வேர்களினின்று வளர்ந்தன என்று காட்டுவதன் மூலம் சொற்கள் காலந்தோறும் வளர்ந்து வந்துள்ள நிலையை அறியலாம். சொல் வளங்கள் அனைத்தையும் உருவாக்கும் ஊற்றுக்களாக வேர்கள் விளங்குகின்றன. தமிழ் பேசுவோர் மனத்திடைத்தோன்றும்எண்ணம்நேரிடையாகவோ மறைமுகமாகவோ இவ்வடிப்படை வேர்க்கருத்துகளுடன் தொடர்பு கொண்டிருக்கும் என்பது திண்ணம்.

"வேர்ச்சொல் 1.) ஆணி வேர்ச்சொற்கள் (primary roots), 2.) பக்க வேர்ச்சொற்கள் (secondary roots), 3.) சல்லி வேர்ச்சொற்கள் (tertiary root) என மூவகைப்படும். வேர்ச்சொற்களுக்கு மூலமான விதைச்சொற்கள் என்பன உண்டு" (பாவாணர்.1944:முன்.10). இப்படி அறப் பழங்காலத்து வேர் என்று குறிப்பிடுவதற்கு முந்தைய நிலையையும் தமிழ் போன்ற இயன்மொழி யிலேயே தெளிவாகக் காண இயலும் என்று விளக்கினார் அவர்.

மொழி காலந்தோறும் மாறும் இயல்புடையது. பழைய இலக்கியங்கள் உள்ள மொழியின் மாற்றத்தை அதன் இலக்கியங்களுடன் ஒப்பிட்டுத் தெரிந்துகொள்ளலாம். காலந்தோறும் புதியதாக வரும் பொருளையும் கருத்தையும் குறிக்கப் புதுச் சொற்கள் பிறக்கின்றன. இப் புதுச் சொற்களும் அம் மொழியிலிருந்து வந்த பழைய சொற்களிலிருந்தே உருவாக்கப் படுகின்றன. இதற்கு "ஒரு கருத்தினின்று மற்றொரு கருத்துத் தோன்றும்போது, ஒரு சொல்லினின்று மற்றொரு சொல் பிறக்க இடமுண்டாகிறது. கருத்து வேறுபடும்போது சொல்லும் வேறுபடல் வேண்டும். அன்றேல் பொருள் மயக்கம் உண்டாவதோடு மொழியும் வளர்ச்சியுறாது. இதுவே சொல்லாக்க அடிப்படை நெறிமுறை." (பாவாணர் 1973:முக.9) என்று மொழியின் சொல் வளர்ச்சிக்கு நெறிமுறை வகுத்துக் காட்டியவர் பாவாணர். இதுபோல் சொற்பிறப்பி யலுக்கு நெறிமுறை வகுக்கும் அளவிற்கு அவர்தம் சொல்லாய்வு ஆழங்கால் பட்டதாக விளங்கியது.

"மக்களைப் போன்றே சொற்களும் குடும்பங் குடும்பமாகவும் கூட்டங் கூட்டமாகவும் இயங்குகின்றன. குடும்பத்தினின்று குடும்பும், குடும்பினின்று குடியும், குடியினின்று குலமும், குலத்தினின்று இனமும், இனத்தினின்று வரணமும், மக்கள் மரபில் கிளைத்துப் பெருகுவது போலச் சொன்மரபிலும் கிளைத்துப் பெருகுகின்றன" (பாவாணர்.1949:108) என்று சொன்மரபிற்குப் புதுவகை வரையறை யிட்டு விளக்கியவர் பாவாணர்.

### மொழியின் கருநிலை

மொழியியல் அறிஞர்களுள் சிலர் மொழி ஒருமுறைதான் தோன்றியது; இன்றைய பல்வேறு மொழிகள் அந்த மூல மொழியிலிருந்து பரவுதலினால் உருவாகின என்னும் கருத்துடை யவர்கள். மொழி பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு இடங்களில் தோன்றின என்னும் கருத்துடையோரும் உள்ளனர்.

பாவாணர் மொழி ஓரிடத்தில் தோன்றியது என்னும் கருத்துடையவர். மொழி தோன்றிய இடம் மாந்தன் தோன்றிய இடமான குமரிக்கண்டமே என்பது அவரது ஆய்வுத் துணிபு. இம் மூல மொழியிலிருந்தே உலக மொழிகள் அனைத்தும் உருவாயின என்பதும் அவரது ஆய்வு முடிபாகும்.

"அறிஞர்கள் மாந்தக்குலத்தின் பழங்கால வரலாற்றில் மொழி உருவாகின என்றும் ஒரு மில்லியன் அல்லது இரண்டு மில்லியன் ஆண்டுகளுக்கு முன் உருவாகின என்றும் கணக்கிடுகின்றனர். நீண்ட காலத்திற்கு முந்தைய நிலையை அறிவியல் நோக்கோடு ஆராய வாய்ப்பில்லை அல்லது முடியாது எனக் கொள்ளத் தேவை இல்லை என்றும் குறிப்பிடுவர்" (மோரிசு சுவடேசு 1972:2).

மொழியியலாளர்கள் ஒப்பிட்டும் மீட்டுருவாக்கம் செய்தும் மொழியின் பழங்காலத் தன்மையைக் கணக்கிடுவர். அவர்கள் மீட்டுருவாக்கம் செய்ததை ஒப்பிட்டுப் பார்க்கப் பதிந்து வைக்கப்பட்ட சான்று எதுவும் நமக்குக் கிடைப்பதில்லை. பாவாணர் பழந்தமிழ் வழக்கு பலவற்றை மீட்டுருவாக்கம் செய்து காட்டினார்; அவற்றை ஒப்பு நோக்கப் பல சான்றுகள் காட்டினார்; குடியேற்றப் பாதுகாப்பு என்று இன மொழிகளில் நிலைபெற்றுள்ள நிலையைக் காட்டித் தெளிவுபடுத்தினார்.

பலர் மொழித்தோற்றம் கடந்த காலத்தில் நிகழ்ந்தது என்று குறித்துவிட்டு, அதன் வளர்ச்சியை விளக்காது சென்று விடுகின்றனர். ஆனால், பாவாணர் மொழிக் கருநிலையைக் காட்டி, அதனினின்று வளர்ந்து வந்த நிலையைத் தெளிவுபடுத்தினார்.

### சிக்கலும் எளிமையும்

"மொழியியலறிஞர் ஆட்டோ எசுபெர்சன் (1860 –1943) ஆய்வு முடிபு மொழி பொதுத்தன்மை யிலிருந்து எளிமைப்பட்டு வந்துள்ளது என்கிறது. இது இக்கால முடிபுக்கு எதிராக உள்ளது. இக் கால ஆய்வாளர்கள் ஆய்வுகள் மொழி எளிய ஓரசைச் சொற்களுடன் உருவாகிப் பின்னர் சிக்கலான தன்மைக்கு வளர்ந்து வந்துள்ளது என்கின்றனர். எசுபெர்சன் மொழி கால வோட்டத்தில் எளிமைப்பட்டு வந்திருப்பதைக் குறிப்பிடுகிறார். சில நெறிவிலக்குகள் இருந்தாலும் மொழி எளிமைப்பட்டு வந்திருக்கிறது என்பது அவரது முடிபாகும். இதனை அவர் மொழி வளர்ச்சி என்றே குறிப்பிடுகிறார்" (மோரிசு சுவடேசு 1972:3).

பாவாணரது சுட்டடிக்கொள்கை மொழி எளிய சுட்டுகளிலிருந்து தோன்றியதை விளக்குகிறது. சுட்டடிகளே தமிழின் சொல்வளத்தைப் பெருக்கிய விதைகள். இவற்றினின்று பிறந்தவை அல், இல், உல் என்னும் முளைகள். இம் முளைகள் குல், கல், துல், நுல், புல், முல் என்னும் ஆணிவேர்ச் சொற்களை உருவாக்கின. இவற்றினின்று மொழிக்குத் தேவையான பல்லாயிரக் கணக்கான சொற்கள் தோன்றின.

பெரும்பாலும் ஒரு மொழியின் வேர்கள் அமைப்பில் ஒரே சீரான அமைப்பைக் கொண்டன" (புளூம்பீல்டு 1935:243).

"மொழியி பழங்கால வரலாற்றில் ஆணிவேர்ச் சொற்கள் மிகவும் இன்றியமையாதன" (மாக்கசுமுல்லர் 1861:273).

"தமிழிய (திராவிட) மொழிகள் வடமொழிக்கு முந்தையதும் மிகப் பழைமையானதுமான பல கூறுகளைக் கொண்டுள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கன அவற்றின் சுட்டுகள்" (கால்டுவெல்:1857:422).

மிகப் பழைமையானதாக விளங்கும் சுட்டடிகளினின்றே மொழி வளர்ச்சியை வகுத்துக் காட்டிய சிறப்பு எண்ணி எண்ணிப் பாராட்டத்தக்கது.

மொழி வரலாற்றில் முதலில் தோன்றியவை எளிய சொற்களே. அவை காலவோட்டத்தில் திரிபு, சேர்க்கை போன்றவற்றால் சிக்கலானவையாக உருவாகி யிருக்கக் கூடும். இத் தன்மையிலிருந்து மீண்டும் எளிமைப்படுவது இயல்பு. எசுபர்சனின் ஆய்வு மொழி தோன்றிய நிலையிலிருந்து கொள்ளப் படாததாலும் இடையிலிருந்து கொள்ளப்பட்டதாலும் மொழி சிக்கலிலிருந்து எளிமைப்பட்டு வந்திருக்கிறது என்கிறது. ஆயின் பாவாணர் ஆய்வு மொழி எளிய ஓசையிலிருந்து பிறந்ததைக் காட்டுகிறது.

"உண்மையில் ஒவ்வொரு சொல்லும் தொட்டிலில் சில காலமும் குழந்தை வளர்ப்பொலியாகச் சில காலமும் செலவழிக்க வேண்டும். அக் காலக் கட்டத்தில் நுண்பொருளுக்கும் உயிர்ப் பொருளுக்கும் குறைந்த அளவே கருத்தோட்டம் இருக்கும்" (மாக்கசு முல்லர் 1888:17).

சொற்களின் இயல்பு எளிமையான தோற்றம் கொண்டது. இதனை நுணுகி ஆராய்ந்து வெளிப்படுத்தினார் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்.

## வேர்மூலம்

பாவாணரது ஆய்வு நெறி, வழக்கிழந்த சொற்களை மீட்டுருவாக்கம் செய்வதற்கும், சுட்டடிகளிலிருந்து ஞாலமுதன்மொழி தோன்றி வளர்ந்திருப்பதைக் காட்டுவதற்கும், ஞால முதன்மொழி தமிழே என்று நிறுவுவதற்கும், அதன் தன்மையை உலக மொழிகளோடு ஒப்பிட்டு ஆராய்வதற்கும் முன்னுரிமை கொண்டு திகழ்கிறது. என்றாலும் இவை அனைத்திற்கும் அடிமணையாகத் திகழ்வது சொல்லுக்கு வேர்மூலம் காண்பது.

"ஒரு சொல்லிற்கு வேர் மூலம் காண முயல்வதற்கு முன் அச் சொல்லின் பழைய வடிவத்தையும், பயன்பாட்டையும், காலந்தோறும் வளர்ந்து வந்துள்ள நிலையையும் கண்டறிய வேண்டும். அச் சொல் தன் சொல்லாக (native origin) இருந்தால் இனமொழிகளில் அதன் வரலாற்றைக் காணவேண்டும்" (கீற்று 1892:9).

சொல்லாராய்ச்சி மூலம் தமிழ்ச் சொற்களுக்கு வேர்மூலம் காண்பதில் வெற்றி கண்டவர் பாவாணர். சொல்லின் பழைய வடிவத்தை இலக்கிய வழக்கிலிருந்து காட்டும் திறனில் தன்னேரில்லாதவர்; வழக்கிழந்த சொற்களை மீட்டுருவாக்கம் செய்வதில் வல்லவர்; இனமொழிகளிலிருந்து சொல் வளர்ச்சியைக் காட்டுவதைத் தவறாது கடைப்பிடித்தவர்; இருவகை வழக்கிலும் சொல் வழக்குப் பெற்ற தன்மையைக் காட்டிச் சொல் காலந்தோறும் வளர்ந்து வந்துள்ள நிலையைக் காட்டுவதில் ஈடிணையற்றவர்.

பாவாணர் தமிழ் நாட்டின் பல இடங்களில் பணியாற்றினார். அதனால் அவருக்குத் தமிழ்நாட்டின் நாட்டுப்புற வழக்குகள், கிளைமொழி வழக்குகள், பழமொழிகளென்று அனைத்தும் அத்துப் படியாய் இருந்தன. அவற்றை வேண்டுமிடங்களில் பயன்படுத்தும் பெற்றியராக இருந்தார்.

"சொன்மூலம் காண்பது அறிவியல் முறையில் அமைய வேண்டும். அது உன்னிப்பின் அடிப்படையில் அமையக்கூடாது. காலந்தோறும் வளர்ந்து வந்துள்ள சொன்னிலை உண்மை நிலையைக் காட்ட உதவும் வழியாகக் கொள்ளவேண்டும்" (கீற்று 1892:6).

சொற்பிறப்பு வகைகளாகப் பத்தினைப் பட்டியல் இட்டுக் காட்டி அவற்றிற்கு எடுத்துக் காட்டுத் தந்து விளக்கும் அளவிற்குச் சொற்பிறப்பியல் தன்மைகளை முழுமையாகவும் நுட்பமாகவும் ஆய்ந்தவர் பாவாணர்; சொல் காலந்தோறும் மாறிவந்துள்ள நிலையைச் சொற்றிரிபின் தன்மை கொண்டு விளக்கும் நுண்ணறிவு உடையவர் பாவாணர். சொல்லின் உண்மைப் பொருளை நுணுகி ஆய்ந்து சொன்மூலங் காணவிழைவதையே அவரது சொல்லாய்வு தெளிவாகக் காட்டுகிறது.

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே." (தொல்.சொல்.155).

"ஒவ்வொரு சொல்லும் தன் சொந்த வரலாற்றைக் கொண்டிருக்கும்." (எமனோ 1965:6).

"மொழியிலுள்ள அனைத்தும் பொருள் உணர்த்துவனவாக இருக்கின்றன" (மாக்கசு முல்லர் 1861:43).

"மொழியிலுள்ளது மிகச் சிறியதாக, இன்றியமையாமை அற்றதாக இருந்தாலும் அது பொருளுடன் இருக்கும் போது இன்றியமையாத தாகிறது" (புளூம்பீல்டு 1935:27).

சொல்லுக்கும் பொருளுக்கும் இயைந்த தொடர்பை ஆய்ந்து காட்டினார் பாவாணர். அதுவும் இயன்மொழியாகிய தமிழிலேயே இவ் வியைபைச் செம்மையாகக் காட்ட இயலும் என்றும் விளக்கினார்.

மொழி கருத்துகளின் வைப்பிடமாக இருப்பதால் உன்னதமான நிலம் என்று அழைக்கலாம்" (மாக்கசு முல்லர் 1861:3).

தமிழ் மொழியின் கருத்துப்பொதிந்த சொற்களின் நிலையை விளக்கிய பெருமை பாவாணரையே சாரும்.

## மொழித் தூய்மை

பிறமொழிச் சொற்கள் கலப்பதால் தமிழின் இனிமை குறைகின்றது. நாளடைவில் தமிழில் கலந்து பிறமொழிச் சொற்கள் நிலைபெற்று அச் சொற்களுக்கு நேரே வழங்கிவந்த தமிழ்ச் சொற்கள் மறைந்து விடுகின்றன. தனித் தமிழில் பேசுதல் வேண்டும். அதற்கான முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும்.

"தமிழ் தமிழிய (திராவிட) மொழிகளுள் பழங்காலந்தொட்டு வளமையுடன் வாழ்ந்து வரும் மொழி. தமிழ் தன்னிடத்துக் கொண்டுள்ள வடசொற்கள் அனைத்தையும் நீக்கி இயங்கும் திறம் கொண்டது; தமிழ் வடமொழித் துணையின்றித் தனித்து இயங்க வல்லது; தமிழ் வடமொழி உதவி இன்றி வளமைபெற்று வளர்ச்சி காணத்தக்கது" (கால்டுவெல் 1857:45).

"தமிழிற் கலந்துள்ள வடசொற்கள் எல்லாம் அதைக் கெடுத்தற்கென்றே ஆரியராற் புகுத்தப்பட்டவையே யன்றித் தமிழறிஞர் அவற்றின் தேவையுணர்ந்து விரும்பிக் கடன் கொண்டவை அல்ல" (பாவாணர்.1969:732) என்று வடசொற்கள் தமிழில் நுழைந்த வகையை விளக்கினார் பாவாணர்.

தமிழ்ச்சொற்கள் பலவற்றை அயற்சொற்கள் என மயங்கிக் கிடந்த நிலை இருந்தது. அவற்றில் பெரும்பான்மை தமிழ்ச்சொற்களாய் இருக்கும்

தன்மையை விளக்கிய பெருமை இவருக்கு உண்டு.

"வடசொற்களுள் குறைந்த பக்கம் ஐந்திலிரு பகுதி தமிழ். நூற்றுக்கணக்கான வடசொற்கட்கு மூலம் அல்லது முதனிலை தமிழிலிலிருக்கிறது" (பாவாணர்.1967:294) என்று வடமொழியிலும் உள்ள தமிழ்ச்சொற்களை எடுத்துக்காட்டினார். அவ்வகையில் அயற்சொற்கள் எனக் கொள்ளப்பட்டு வந்த சொற்கள் பல தமிழாய் இருப்பது வெளிபடையாயிற்று. அதே போல் வடசொல் பலவற்றிற்குத் தமிழில் மூலம் இருப்பதும் தெளிவாயிற்று.

கலைச் சொல் படைப்பதில் சொன்மை மாறாமல் படைத்துத் தமிழ் மொழிக்கு அழகு சேர்த்தவர் பாவாணர்; கலைச்சொல் படைப்பதற்கு வழிவகையும் காட்டினார் அவர்.

எத்துறைப் பொருள் குறித்தும் விளக்கக் கூடிய சொல்வளம் மிக்க மொழி தமிழ் என்பதை வெளிச்சமிட்டுக் காட்டியவர் பாவாணர். பிறமொழிச் சொற்களை நீக்கி அவற்றிற்கு இணையான தமிழ்ச் சொற்களை உலக வழக்கு, இலக்கிய வழக்கு ஆகியவற்றினின்று எடுத்தும் புதுச் சொல் புனைந்தும் தமிழுக்கு ஏற்றத்தைக் காட்டியவர் அவர்.

மொழித் தூய்மைக் கோட்பாடு தமிழ் மொழிக்கு மட்டுமே உரியதன்று. பிறமொழிச் சொற்களை நீக்கி மொழியைத் தூய்மைப் படுத்தும் முயற்சி பல விடங்களில் நிகழ்ந்துள்ளது. மொழித் தூய்மை மொழியை வளப்படுத்துவதற்கு இன்றியமையாதது. மொழியின் தனித்தன்மை அழிந்துவிடும் என்னும் அச்சம், தங்கள் மொழிமீது கொண்டிருக்கும் பெருமித உணர்வு போன்ற காரணங்களினால் மொழித்தூய்மை முயற்சி கொள்ளப்பட்டுள்ளது.

ஆங்கில மொழியில் மொழித்தூய்மைக் கோட்பாடு கி.பி.1913 –ல் தொடங்கிய 'தூய ஆங்கில கழகம்' அமைப்புத் தோன்றக் காரணமாயிற்று. பிரஞ்சு மொழியில் கி.பி. 1635 –ல் ஏற்படுத்தப்பட்ட பிரஞ்சுக் கழகம் (Academic Francaise) மொழியைத் தூய்மைப்படுத்தும் நோக்கில் அமைக்கப்பட்டது.

கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளில் முறையே கி.பி. 9, 17, 18 ஆம் நூற்றாண்டுகளில் மொழித்தூய்மை முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டதற்கான சான்றுகள் கிடைக்கின்றன. தூய கன்னடம் திருள் கன்னடம் அல்லது அச்ச கன்னடம் என்றும், தூய தெலுங்கு அச்ச தெலுங்கு என்றும் தூய மலையாளம் பச்ச மலையாளம் என்றும் வழங்கப்பட்டன. இதேபோல் இந்தி, கூர்ச்சரம், பஞ்சாபி, வங்கம், திரிபுரி, அரபி, சிங்களம், கொரியா, வியத்நாமி, சீனம், செருமானியம், உருசியா, துருக்கி, பல்கேரியா, இத்தாலி போன்ற மொழிகளிலும் பல்வேறு காலக்கட்டங்களிலும் மொழித்தூய்மையாக்கும் முயற்சிகள் நடந்துள்ளன.

### புதுவகை

ஒரு குடும்ப மொழிகளுக்கிடையே உள்ள உறவுகளை ஆராய்வது ஒப்பியன் மொழியியல். தமிழைத் தமிழின மொழிகளோடு ஒப்பிட்டு ஆராய்ந்து, தம் ஒப்பியன் மொழிநூல் திறனைக் காட்டியவர் பாவாணர். இது அனைவரும் கடைப்பிடிக்கும் ஒரு நிலை. தமிழைப் பிறமொழிக் குடும்பங்களுடன் ஒப்பிட்டு ஆய்ந்தது ஒப்பியன் மொழியியலில் அவர் கண்ட புதுநிலை.

தமிழ்ச் சொற்களுக்குத் தமிழிய மொழிகளில் இனச்சொல் காட்டியது குடும்ப மொழிகளுக் கிடையே இனச்சொல் காட்டும் நிலை. தமிழ்ச் சொற்களுக்கு உலகமொழிகள் பலவற்றினின்று இனச்சொல் காட்டியது பாவாணர் காட்டிய புதுநிலை.

ஒப்பியன் மொழியியல் ஒரு மொழியின் பல்வேறு நிலைகளை யறியத் துணை செய்வதோடு அதனோடு தொடர்புடைய மொழிகளின் இயல்பினை யறியவுந் துணை செய்கின்றது.

பாவாணர் உலகமொழிகள் பலவற்றினின்று சான்று காட்டி நிறுவும் திறமையுடையவர்; இதனைக் கொண்டு மொழிகளுக்கிடையே நிலவும் தொடர்பினை வகைப்படுத்தித் தெரிவியல் (theory) உருவாக்கும் வல்லமை படைத்தவர்.

உலக மொழிகளை இயன்மொழி (primitive language) என்றும் திரிமொழிகள் (derivative languages) என்றும் வகைப்படுத்தியவர் பாவாணர். திரிமொழிகளிலிருந்து திரிந்த திரிபில் திரிமொழிகளை அடையாளம் காட்டியவரும் அவரே.

### சொற்பிறப்பியல் அகரமுதலி

தமிழை ஞால முதன்மொழி என நிறுவுவது பாவாணர் ஆய்வுப்பணியின் நடுவ நோக்கம். இக் கொள்கையை நிலைநாட்டத் தமிழின் வளமை, தொன்மை, ஆற்றல் முதலியவற்றை முகாமையாக எடுத்துக் கொண்டார். தமிழின் வளமையை நிலைபெறச் செய்ய வேண்டும் என்னும் அளவிலேயே தனித்தமிழ்பேணுதல்என்னும்கருத்துடையவரானார்.

அகரமுதலி பொதுவாகச் சொற்பொருள் உணர்த்தும் பாங்கில் அமைக்கப்படுகிறது. சொற்பிறப்புத் தன்மையிலான சிறப்புவகை அகரமுதலி சொல்லின் வேர்மூலம் காட்டுவதோடு நிற்கும். ஆனால் பாவாணருக்குச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி அவரது ஆய்வுகள் அனைத்திற்கும் உறைவிடமாக விளங்கியது. தமிழ்ச் சொற்களைப் பிறமொழிச் சொற்களினின்று பிரித்துக் காட்டும் களமாகவும் விளங்கியது.

தமிழ் தென்னாட்டுப் பழங்குடி மொழி, குமரிநாட்டுமொழி, தமிழ் திராவிடத் தாய்மொழி, ஆரியத்திற்கு முந்திய மொழி, ஆரியத்திற்கு மூலமொழி, சொல்வளமிக்க தற்சார்பு மொழி, உலக முதன்மொழி, வேர்ப்பொருள் காட்டும் மொழி, உயர்தனிச் செம்மொழி, தூய மரபு மொழி, ஒப்புயர்வில்லாத் தனிமொழி என்னும் பொருள்களை அடிப்படைக் கொள்கையாகக் கொண்டு உருவாக்கப்படுவதே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி எனக் கருதினார் பாவாணர்.

இதிலும் பாவாணரின் தனித்தன்மை விளங்குகிறது. இதுவரை பிறர் எவரும் கடைப்பிடிக்காத ஒரு புதுவகையில் சிந்தித்தார். தமிழின் ஒட்டு மொத்த வளமைகள் அனைத்தையும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இடம்பெறுமாறு செய்யவேண்டும் எனத் திட்டமிட்டார். சொற்பிறப்பியல் அகரமுதலிக்குக் கலைக் களஞ்சிய அமைப்பினைப் புகுத்தினார். இதற்குக் கலைக்களஞ்சியத்திற்கு இல்லாத ஒரு புது பண்பு உண்டு. சொற்கள் அனைத்திலும் சிறியதும் பெரியதுமான விளக்கங்கள் இடம்பெறுவதால் எல்லா இடங்களிலும் சொற்பிறப்பு, விளக்கம் ஆகியன இடம்பெறச் செய்யலாம். கலைக்களஞ்சியச் செய்திகளையும் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இடம்பெற வழிகாட்டினார்.

"மொழியாராய்ச்சி, சொல்லாராய்ச்சி, இலக்கணத்தேர்ச்சி, சொற்றொகுப்பு ஆகிய நாற்றிறம் கொண்டவரால்தான் ஒரு அகரமுதலியைத் தொகுக்கவோ திருத்தவோ இயலும்" (பாவாணர் 1968:67) என்றார் பாவாணர். இந் நாற்றிறங்களுடன் அகரமுதலிப் பணியில் ஈடுபட்டார். அகரமுதலியிலும் ஒரு புது வகையை நிலைநாட்டினார்.

சொற்பிறப்பியல் சொல்லின் தோற்றம் அல்லது அதன் வரலாற்றைக் கண்டறிவதோடு அதன் மெய்யான தன்மையையும் விளக்குவது. பாவாணருக்குச் சொற்பிறப்பியல் சொற்களின் வரலாற்றைப் பற்றிய படிப்பாகவும் சொற்களின் மூலங்களைக் காண்பதற்கு உதவுவதாகவும் இருந்தது என்பது உண்மை. என்றாலும் அடிப்படையில் சொற்பிறப்பியல் மொழியின் இயல்பைக் காட்டுவதாக இருக்கிறது எனக் கொண்டார் பாவாணர்.

வரலாறு, மொழிவரலாறு, பண்பாடு, நாகரிகம், மொழிநூல், சொல்லாய்வு, தமிழ் மரபு போன்ற பல கோணங்களில் ஆய்வு மேற்கொண்டார் பாவாணர். தம் ஆய்வின் மூலம் கண்டவை அனைத்தையும் பிறவற்றையும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இடம்பெறச் செய்து முழுநிறைவான, தமிழின் ஒட்டுமொத்த நிலையைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி வடிவில் காண முயன்றார் பாவாணர்.

### மேற்கோள் நூல்கள்


1.தொல்காப்பிய சொல்லதிகாரம், 1980, கழகம், சென்னை

2.பாவாணர், 1964, திரவிடத்தாய், கழகம், சென்னை (முதற்பதிப்பு1944)

3.பாவாணர், 1992, சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், கழகம், சென்னை (முதற்பதிப்பு1949)

4.பாவாணர், 1967, வடமொழி வரலாறு, நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி

5.பாவாணர், 1968, வண்ணனைமொழிநூலின் வழுவியல், நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி

6.பாவாணர், 1969, திருக்குறள் தமிழ் மரபுரை, நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி

7.பாவாணர், 1973, வேர்ச்சொற் கட்டுரைகள், கழகம், சென்னை

8. பாவாணர், 1988, என் அண்ணாமலை நகர் வாழ்க்கை, பாவாணர் பதிப்பகம், பெங்களூர்

9. Bloonfield, Leonard, 1996, Language, Motilal Banarsidas, Delhi (first edition1935)

10. Caldwell, Robert, 1987, A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages, AES, New Delhi (first edition 1857)

11. Emeneau, M.B.,1965, India and Historical Grammar, Annamalai University

12. MaxMuller, F.,1965, Lectures on the Science of Language, Munshi Ram Manohar Lal, Delhi (first edition 1861)

13. MaxMuller, F.,1987, Biographies of words and the home of the Aryas, AES, New Delhi (first edition 1888)

14. Morris Swadesh,1972, The Origin and Diversification of Language, Routledge of Kegan. London

15. Skeet, W.,1892, Principles of English Etymology, Oxford

# சேரச் சேர விரியும், பெருகும்
# துளைக்கத் துளைக்க சிறுக்கும் நுணுகும்
## (குவாண்டம் தெரியியம் ஒரு வேர்ச்சொல் பார்வை)

**இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா



தமிழ்மறையாம் திருக்குறளில் வரும்

நுண்மாண் நுழைபுலம் இல்லான்
எழில்நலம் மண்மாண் புனைபாவை யற்று.
(407)

எனும் குறட்பாவில்

நுண், மாண், நுழைபுலம் எனும் தொடரினை ஆராயின்,

நுண் = நுண்மைமிக்க
மாண் = விரிந்த
நுழை = ஆழமாய் ஆழ்ந்த
புலம் = அறிவு

எனப் பொருள் விளக்கம் பலராலும் செய்யப்பட்டுள்ளது.

தொல்காப்பியத்தில்

நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை –
சொல். உரி:76/1

எனும் நூற்பா நொசி , நுழை, நுணங்கு நுண்மையைக் குறிப்பன என்கின்றது.

இவை எப்படி நுண்மையைக் குறிக்கும் என்பது பற்றியும் மாண் என்பது எப்படி விரிவைக் குறிக்கும் என்பது பற்றியுமே நம் ஆய்வு.

இவற்றுக்கு வேர்ச்சொல்லாய்வுப் பேரறிவர் பாவாணரின் ஆய்வே அடியாய் , மூலமாய் விளங்கி இவ்வாய்வுக்கு வழிவிட்டுள்ளது.

ஊகாரச் சுட்டில் உல் எனும் வேர் முளை பிறப்பிக்கும் பல்வேறு கருத்துகளில் சேரல்(கலத்தல்) கருத்தும் துளைத்தல் கருத்தும் அடங்குவன.
முன்னுற்றுச் சென்று நெருங்கி மேலும் நகர்ந்து முட்டுபடும் பொருளோடு சேர்வதும் சேரும் பொருளின் வன்மையாலும் கூர்மையாலும் சேரப்படும் பொருளின் மென்மையால் துளைக்கப்படுதலும் வினையாய் நிகழ்வது இயல்பே.

விதையிலிருந்து கிளம்பிய வேர் நீரைத் தேடிச் செல்கையில் முட்டுபடும் பொருளைச் சேரும்.. அல்லது துளைக்கும் என்பதை இங்கோர் எடுத்துக்காட்டாய்க் கொள்ளலாம்.

ஒரு பொருளில் அதே பொருளோ மற்றொரு பொருளோ சேரச் சேரப் பெருகலும் விரிதலும் மிகுதலும் நிகழும்.

கொட்டிக் கிடக்கும் மண் குவியலில் மேலும் மண்ணைச் சேர்த்தால் மண் குவியல் மேலும் பெருகும்.

இக்கருத்தடைவே உல் எனும் வேரிலும் நிகழ்வதைக் காணலாம்.

உல் > முல் > மல் = பெருகல்

மலிதல் = பெருகல்

மலிந்து பெருகியது வலுவுடையதாகும்.

மல் > இந்தோ ஐரோப்பிய மொழி வேரில் மெல் எனத் திரிந்துள்ளது.

மலிந்து, பெருகியது பன்மையாகும்.

multi

before vowels mult-, word-forming element meaning "many, many times, much," from combining form of Latin multus "much, many," from PIE *ml-to-, from root *mel- (2) "strong, great, numerous." It was much-used in forming Latin compounds in classical times and after (such as multianimis "having much courage," multibibus "much-drinking," multicomus"having much hair," multiloquus "talkative"). Many English words that use it (multinational, etc.) are 20c. coinages.

ஆங்கிலத்தில் mel > multi ஆகிப் பல்வேறு சொற்களின் முன்னோட்டாய் ( suffix) விளங்குவதைக் காணலாம்.

உல் > முல்> மல்>மால்> மாள்> மாண் =
பெருமைமிகு பண்பு .
மாண்>மாணுதல் = மிகுதல்
மாண்>மாண்பு = பெருமை
மாண்>மாட்சி
மாண்>மாட்சி>மாட்சிமை
மாண்>மாணம்= மாட்சிமை
மாண்>மாணல்= மாட்சிமை

மல்> மல்கு = பெருகு
மல்கோடு பல்கு என்பதும் பன்மைப் பொருளில்
உல்>புல்> பல்> பல்கு எனச் சேரச் சேரச் சேர்ந்து பெருகியது; பல்கியது பெருத்தது; பலவானது.

புல்>பல்>பல
பல்>பன்மை
பல்>பரு>பெரு

மல்லும் பல்லும் பல்கல் பொருளில் விளைந்தனவே.

மல்கல் என்னும் பெருமைக்குப் பின் நுண், நுழை, நொசிவைக் குறித்து ஆய்வோமா?

உல் சேரல் கருத்தை மட்டும் உணர்த்தவில்லை. அது பிறப்பிக்கும் மற்றொரு கருத்து துளைத்தல் கருத்ததாகும். துளைக்கப்படுவது பிளக்கும் ; பிளந்தது மேலும் துளைக்கத் துளைக்கப் பிளந்து பிளந்து சிறுக்கும். சிறுக்கச் சிறுக்க நுணுகும்.

எனவே,

உல்> நுல்>நுள்> நுண் = மிகச் சிறுத்தது.
நுண்>நுண்மை = மிக நுணுங்கிய சிறுமை.

உல்>நுல்> நொல்>நொலி >நொசி = நுண்மை
உல்>நுல்> நுழ்>நுழை
நுழை>நூழை = நுண்மை

பிளக்கப் பிளக்க சிறுத்து நுண்மைத்தாகும். அவ்வாறு நுண்மையானது நுழை , நொசி எனப்பட்டது.

நுழை புலம் எனின் நுண்மை அறிவு எனப் பொருள்.

அணுவைப் பிளக்கப் பிளக்க நுண்மைத்தாகி நுழைவாகி நொறியும். நொறிந்தது நுறிந்ததுமாகும்.

நுண், நொசி, நுழை, நூழை, நொறு, நுறு என அனைத்தும் நுண்மையைக் குறிப்பனவே.

இனி அணு என்பது மிக மிகச் செறிவான பொருளை உணர்த்தும் அருந்தமிழ்ச் சொல்லாகும்.

உல்> அன்> அண்> அணு = மிக நுண்ணியதாய்ப் பாரிய ஆற்றலைத தன்னகத்தே செறியச் செய்திருப்பது .

இவ்வணுவைப் பிளக்க அதனுள் அடங்கியிருக்கும் நுண்கூறுகள் வெளிப்படும். நுண்கூறுகளையும் பிளக்கப் பிளக்க அவற்றினும் மிக மிக நுண்ணியதான

கூறுகளும் கதிரலைகளும் வெளிப்படும். இதனைக் குவாண்டம் quantum எனக் கூறுகின்றனர்.

இது மொத்தம் எத்தனை, எவ்வளவு என எண்ணிக்கையினையும் பருமையினையும், தொலைவினையும் குறிக்கப் பயன்படுத்தப்பட்ட பெயர்ச்சொல்லாகும்.

quantum (n.)
1610s, "sum, amount," from Latin quantum (plural quanta) "as much as, so much as; how much? how far? how great an extent?" neuter singular of correl-ative pronominal adjective quantus "as much" (see quantity).
The word was introduced in physics directly from Latin by Max Planck, 1900, on the notion of "mini-mum amount of a quantity which can exist;" rein-forced by Einstein, 1905. Quantum theory is from 1912; quantum mechanics, 1922. The term quan-tum jump "abrupt transition from one stationary state to another" is recorded by 1954; quantum leap "sudden large advance" (1963), is often figurative.
also from 1610s

என்பது இந்தக் குவாண்டம் எனுஞ் சொல்லுக்கு ஆங்கில வேர்ச்சொல் அகரமுதலி விளக்கம் வழங்கியுள்ளது.

அணுவையும் அண்டத்தையும் ஆழ ஆழ நுழைந்து நுழைந்து ஆய ஆய நமக்குத் தென்பட்ட ஓர் ஒளி நுழிமம் என்பது.
உல்> நுல்> நுழ்> நுழி > நுழிமம்..

ஆழ்ந்த நுண்மையையும் அளவையும் கூற்றையும் இச்சொல் குறிக்கும். இவ்வொரு சொல்லை முன்னொட்டாய்க் கொண்டு அது சார்ந்த தொடர்சொற்களுக்கும் தமிழாக்கம் செய்யலாம் என்பது என் துணிபு. இஃது அணுவின் விரிவாய் விளங்கும் பேரண்டத்திற்கும் அதன் ஆகு பெயராய் அமையப் பொருந்துவதே.
எனவே,

1. Quantum theory– நுழிமத் தெரியியம்
2. Quanta– நுழிமா ( ஓர் அளவீடு)
3. Quantum jump – நுழிமத் தாவல்; நுழிமப் பாய்வு
4. Quantum physics– நுழிமப் பூதியல்
5. Quantum random number generator (QRNG) – நுழிம இலக்கில் எண்ணாக்கி
6. Quantum dice – நுழிமப் பகடை
7. Quantum noise– நுழிம இரைச்சல்
8. Quantum Computing – நுழிமக் கணிக்கை
9. Quantum Communication – நுழிமத் தொடர்பியல்
10. Quantum technology– நுழிம நுட்பியல்
11. Quantum mechanics– நுழிம இயக்கவியல்
12. Quantum chemistry– நுழிம வேதியல்
13. Quantum field theory– நுழிமக் களத் தெரியியம்
14. Quantum information science– நுழிமத் தெரிவல் அறிவியல்
15. Quantum efficiency– நுழிமத் திறம்
16. Quantum system – நுழிம முறைமை
17. Quantum condition – நுழிமக் கட்டு
18. Quantum gravity– நுழிம ஈர்ப்பாற்றல்
19. Quantum number– நுழிம எண்
20. Quantum detector– நுழிமக்காணி
21. Quantum Entanglement – நுழிமப் பின்னல்

எனச் சொல்லாக்கங்களைப் பொருந்த விரித்துச் செல்லலாம்.

நுழிமம் புதுச்சொல்லே.

ஆனால் நுண்மை கருத்தைக் குறிக்கும் வேரின் பிறப்பே. புத்துலக ஆய்வின் ஆக்கம் அயல்மொழியாயினும் தமிழில் புத்தாக்கம் செய்வது தமிழுக்கே நலத்தது . சொல்லாக்க ஆய்வினைத் தொடர்வோம் தமிழ் நலம் பேணுவோம்.

# அரோகரா!

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"ஜம்புலிங்கமே ஜடாதரா ஜோதிலிங்கமே
அரோகரா
வாயுலிங்கமே அடா புடா பஞ்சலிங்கமே மடா படா
வாயுலிங்கமே சதாசிவா பஞ்சலிங்கமே மகாதேவா
ஜம்புலிங்கமே ஜடாதரா ஜோதிலிங்கமே அரோகரா"
(வாலி, காசேதான் கடவுளடா).

*****

அரோ + அரோ = அரோகரா – எழுச்சி மிக்க உணர்ச்சி வெளிப்பாட்டுக் குறிப்பு.
ஆராரோ, ஆரிராரோ – தாலாட்டு ஒலிக் குறிப்புகள்.

அரவம் = பேரொலி.
தமிழ் இலக்கணத்தில் வஞ்சி அரவம் அல்லது அரவம் என்பது புறப்பொருள் திணைகளுள் ஒன்றான வஞ்சித் திணையின் ஒரு துறை அல்லது உட்பிரிவு ஆகும்.

தொல்காப்பியத்தில் வஞ்சித் திணையின் முதல் துறையாக வஞ்சி அரவம் குறிக்கப்படுகிறது.

"இயங்கு படை அரவம், எரி பரந்து எடுத்தல்,
வயங்கல் எய்திய பெருமையானும்,
கொடுத்தல் எய்திய கொடைமையானும்,..." –
(தொல்காப்பியம், பொருளதிகாரம்: 2 –7).

இங்கே அரவம் என்பது ஒலி என்னும் பொருள் கொண்டது. படையெடுத்துச் செல்லும்போது நால்வகைப் படைகளும் எழுப்பும் ஒலி பற்றிக் கூறுவதால் இத்துறைக்கு இப் பெயர் ஏற்பட்டது.

"பௌவம் பணைமுழங்கப் பற்றார்மண் பாழாக
வெளவிய வஞ்சி வலம்புனையச் – செவ்வேல்
ஒளிரும் படைநடுவண் ஊழித்தீ யன்ன
களிறும் களித்ததிரும் கார்"
(புறப்பொருள் வெண்பாமாலை – 36).
செவ்வேல் ஒளிரும் படை!

ஆர்ப்பு + அரவம் = ஆர்ப்பரவம்,
ஆரவாரித்து எழும் பேரொலி.
ஆர்ப்பரவம் = போர் எனப் பொருள் கூறுகிறது சென்னைப் பேரகரமுதலி.

ஆரம் + ஆரம் = ஆரவாரம்
ஆர் – ஆர்தல் – ஆர்த்தல் – ஆரம் – ஆர்வம் – அரவம்.
ஆர் – ஆரிப்பு – ஆரவாரிப்பு.
அலர் + ஆரிப்பு = அலாரிப்பு (நாட்டியத் தொடக்கம்).

இன்று சிலர் 'ஸ்ரீ ராமஜயம்' எழுதுவது போல 'முருகனுக்கே வெற்றி' என்னும் பொருளில், 'வெற்றி வேல், வீர வேல் ' 'வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா' எனப் போர் முழக்கங்கள் பண்டைக் காலத்தில் எழுப்பப் பட்டிருக்க வேண்டும்.

"யா கா
பிற பிறக்கு அரோ போ மாது என வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி."
(தொல்காப்பியம், இடையியல் – 31).

"ஓசை பெற்று உயர் பாற்கடல் உற்று, ஒரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென,
ஆசை பற்றி அறையலுற்றேன் மற்று, இக்
காசு இல் கொற்றத்து இராமன் கதைஅரோ!"
(கம்பராமாயணம், அவையடக்கம்).

"அள்ளல் பழனத்து அரக்கு ஆம்பல் வாய் அவிழ
வெள்ளம் தீப்பட்டது என வெரீஇ, – புள்ளினம் தம்
கைச் சிறகால் பார்ப்பு ஒடுக்கும் கௌவை
உடைத்து அரோ

நச்சிலை வேல் கோக் கோதை நாடு"

(முத்தொள்ளாயிரம்).

அரோ – அசையாக இருப்பினும் ஒலிக் குறிப்பு.

இராவணன் சோர்ந்து விழுதல்,

"சுடர்க் கொழும் புகை தீ விழி தூண்டிட,
தடற்று வாள் உருவி, தரு தூதரை
மிடற்று வீசல் உறா, விழுந்தான் அரோ–
கடல் பெருந் திரைபோல் கரம் சோரவே".

(கம்பராமாயணம், மூலபடை வதைப் படலம் – 5).

அரோ – அசையாயினும் 'அந்தோ' என்பதைப் போல இரக்கக் குறிப்பை உணர்த்துகிறது.

படகு தள்ளுவோர் 'ஐலேசா ஐலேசா' என இன்றும் குரல் எழுப்புகின்றனர்.

அக் காலத்தில் பட்டிமண்டபப் பாங்கறிந்தேறிய சமயப் புலவோர் வெற்றிபெற்றதும், வெற்றி பெறும் கொரிலா குரங்குகள் மார்பில் அடித்துக் கொள்வதைப் போல, 'நாவலோ நாவல்' என்று மகிழ்ச்சிக் குரல் எழுப்பியுள்ளனர். இதைப் பின் தொடர்ந்து வேளாண் விளைச்சல் பெருகிய மகிழ்ச்சியிலும் நாவலோ நாவல் என்று கூறத் தொடங்கியுள்ளனர்.

"காவல் உழவர் களத்தகத்துப் போர்ஏறி
நாவலோஒ என்றிசைக்கும் நாளோதை –
காவலன்தன்
கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற்
போலுமே
நல்யானைக் கோக்கிள்ளி நாடு."

(முத்தொள்ளாயிரம் – 46).

"நாவலோ நாவலென நாடறிய முறையிட்ட
ஏவலோர் போர்க்களத்தில் எதிர்நிற்பர்
முத்தமிழ்தேர்
பாவலோ ரிசைவல்லோர் பற்றுடைய
பதினெண்மர்
காவலோ ரெல்லாருங் கையேற்கும் பொருட்டாலே"

(கம்பர், ஏர் எழுபது – 59).

ஞானசம்பந்தர் அமர்ந்த பல்லக்குத் தூக்கிகள் 'ஏலேலோ, ஏலேலோ என்றனராம். இதைப் பொருளுடைய சொல்லாக்க 'அரகரா ' என்று ஒலியெழுப்புமாறு ஞானசம்பந்தர் கூறினார் எனக் கூறப்படுகிறது.

ஏலேலோ –> அரகரா ––> 'ஹர ஹர' எனக் கூறப்படுவது நல்ல சுவையான ஆன்மிகக் கதையாக உள்ளது. முருகனுக்குச் சொல்வதை அரனுக்கு ஆக்கி 'அரகர (ஹரஹர) நமச்சிவாய' 'அரகர மகாதேவா' எனவும் வழங்கப்படுகிறது.

அர – அரோ என்னும் ஒலிக்குறிப்புப் பண்டைக் காலத்தில் போர் மறவர்களுக்கு எழுச்சியூட்டும் வகையில் ஒலிக்கப்பட்டிருக்கலாம்.

––––––––

இலக்கியத்துக்கான நோபல் பரிசு (1954) பெற்ற அமெரிக்க எழுத்தாளர் ஏனசுடு எமிங்வே ( Ernest Hemingway – 1899–1961) எழுதிய உலகப் புகழ்பெற்ற புதினம் "A Farewell to Arms" – 1929. முதல் உலகப் போர் முடிந்த பிறகு, போர்க்கொடுமைகளை உள்வாங்கி எழுதப்பட்டது. போர்க்கருவிகளுக்கு (arms) விடைசொல்லிவரும் வீரன் ஒருவன் கைகளில் மனைவியும் குழந்தையும் உயிர்விட அவர்களின் அன்புக் கைகளுக்கும் (arms) பிரியா விடை தருகிறான்.

பின்வரும் ஆங்கிலப் பாடலின் தலைப்பையே இப் புதினத்தின் பெயராகச் சூட்டிவிட்டார். நல்ல பாடல் என்பதால் முழுமையாகப் பதிவிட்டிருக்கிறேன். பொறுத்துக்கொள்ளவும்.

GEORGE PEELE (1556–96) எழுதிய
A Farewell to Arms (1590).

*

His golden locks Time hath to silver turn'd;
O Time too swift, O swiftness never ceasing!
His youth 'gainst time and age hath ever spurn'd,
But spurn'd in vain; youth waneth by increasing:
Beauty, strength, youth, are flowers but fading seen;

Duty, faith, love, are roots, and ever green.

His helmet now shall make a hive for bees;
And, lovers' sonnets turn'd to holy psalms,
A man–at–arms must now serve on his knees,
And feed on prayers, which are Age his alms:
But though from court to cottage he depart,
His Saint is sure of his unspotted heart.

And when he saddest sits in homely cell,
He'll teach his swains this carol for a song,–
'Blest be the hearts that wish my sovereign well,
Curst be the souls that think her any wrong.'
Goddess, allow this aged man his right
To be your beadsman now that was your knight.

---------------------

பாம்பு 'ஆடும்போதே இரையும் ஆடிக் குடத்தடையும் ' என்பார் காளமேகம்.

'அரவம் ஆட்டேல்' என்பார் ஔவையார்.

'அர் = ஒலிக்குறிப்பு
அரவம் = ஒலி
அரா, அரவு, அரவம் = இரைவது, ஒலியறிவது, பாம்பு' என்பார் பாவாணர்.

பிள்ளைகள் விளையாடும் போது வீட்டில், "தாத்தா தூங்குகிறார், அரவம் காட்டாமல் பையப் போங்கள் ' என்பார்கள்.
'உலகம் ஊமையா உள்ள அக் காலையே ' ஒலியுடன் கூடிய தமிழ் மொழி 'அரவம்' எனப்படுவதில் வியப்பில்லை. தமிழர்கள் அரவர்கள் எனப் படுவதும், நாகர்கள் எனப்படுவதும் தொன்மை குறித்தனவே.

இன்று பரவலாகப் பேசும் 'அலாரம்' (alarm) தூக்கத்திலிருந்து எழுப்பும் கடிகார ஒலியாகவும், தீயணைப்பு வண்டியின் மணி ஒலி போன்ற எச்சரிக்கை ஒலியாகவும் கருதப்படுகிறது.

ஆனால், alarm என்பது பிரஞ்சு மொழி அடிப்படையில் மூன்று சொற்களின் கூட்டு!
à= to
le = the
arm – arms. –– அதாவது போருக்கு அணியமாகிக் கருவி ஏந்தி நில் என்று (attack போல) ஆணையிடுவது.

அடு களம் = போர்க்களம்.
அடு = போரிடு.
"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று இவ்வுலகத்து இயற்கை"
(புறநானூறு – 70).

இந்தி : ட > ர; பஹாட்(மலை) > பஹார் (பேச்சு மொழி), பஹாடி – பஹாரி மொழி.

அடு > அடல் – மிடல் = வலிமை.

அடு – (அரு –=இது இந்தை ஐரோப்பிய மூலம்) > அரோ > அரோகரா > அரவம் = (to the arms) = a + l' + arm = alarm.

(போர் அரவம் என்பதற்கும் alarm என்பதற்குமான பொருத்தப்பாடு மட்டுமே இங்குப் பேசப்படுகிறது.)

alarm (n.)
late 14c., "a call to arms in the face of danger or an enemy," from Old French alarme (14c.), from Italian all'arme "to arms!" (literally "to the arms"); a contraction of phrase alle arme. Alle is itself a contraction of a "to" (from Latin ad; see ad–) + le, from Latin illas, fem. accusative plural of ille "the" (see le); with arme, from Latin arma "weapons" (including armor), literally "tools, implements (of war)," from PIE root *ar– "to fit together."



# திருக்குறளில் 'அடை'

## – ஒப்புருப் பொருண்மை


பேரா. முனைவர் ப. கொழுந்தசாமி,

அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.


உயர்தனிச் செம்மொழியான தமிழின் பொருண்மை வளம் சீரியது; செறிவானது. தமிழின் ஒவ்வொரு சொல்லையும் தொடர்ச் சூழல் நோக்கிக் கருத்துணரமுடியும். காலத் தொன்மையாலும் வட்டார வழக்காலும் சொற்பொருண்மையில் மாற்றங்கள் ஏற்பட்டிருந்தாலும் இலக்கண அறிவினால் கருத்தறியலாம். அந் நிலையில் திருக்குறளில் 'அடை' என்னும் ஒப்புருச் சொல் இயலுமாற்றை விளக்குவதாக இக் குறிப்புரை அமைந்துள்ளது.

### 'அடை' பொருள் :

பழந்தமிழ்ச் சொல்லான இது, இன்றைய வழக்கிலும் இயல்கின்றது. பெயராக உணவுப் பொருள்/ பெயரடை ; வினையாக சேர்தல், மூடுதல் ஆகிய பல பொருளில் ஆளப்படுகின்றது. இலக்கியங்களில் மேலும் பல பொருளில் வழங்கப்படுகின்றது. சொல்லாட்சிப் புதுமைகளைக் கொண்டுள்ள வள்ளுவத்தில்,

வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்கும் கல் (38 )

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும் (71)

ஆகிய குறட்பாக்களில் 'மூடுதல்' என்கின்ற செயப்படுபொருள்குன்றா வினையமைப்பில், பெயரெச்சமாக அமைகின்றது.

உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்
அடையாவாம் ஆயங் கொளின் (939 )

என்னும் குறட்பாவில் வந்துசேர்தல் / கிடைத்தல் என்று செயப்படுபொருள்குன்றா வினையமைப்பில், வினைமுற்றாக அமைகின்றது. இவ்வாறு திருக்குறளில் பயில்கின்ற ஒவ்வொரு சொல்லையும் சொற்பொருண்மை நோக்கில் அணுகித் தெளியின் வள்ளுவத்தின் சீர்மையும், விழிமியத்தின் வீச்சும் புலனாகும். இதற்கு இலக்கண அறிவும் துணையாகும்.

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 164–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 164–ஆவது கூட்டம் 12.09.2024 ஆம் நாள் நடைபெற்றது.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது.

மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்றதமிழ்க்கலைக்கழகத்தின் 164–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 170 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :**

| | |
|---|---|
| Cavernous Gloom | காரிருள் |
| Charity Shop | தொண்டுக்கான விற்பனைக் கடை |
| Choked Road | நெரிசல் சாலை |
| Cloak Round | தளர் மேலாடை |
| Close Call | கண நிகழ்வு |
| Cold Calling | விளம்பர அழைப்பு |
| Combative Instinct | தாக்குணர்ச்சி |
| Crispy Hair | சுருள் முடி |
| Cross Fit | மீத்திறன் பயிற்சி |
| Digital Flex | எண்ம பதாகை |
| Dumb Bells | வலுத்தூக்கு எடை |
| e Banking | மின் வைப்பகம் |

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 165–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 165–ஆவது கூட்டம் 20.09.2024 ஆம் நாள் நடைபெற்றது.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 165–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், முனைவர் ஆ. அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர்.

இக்கூட்டத்தில் 152 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| Admission Criteria | நுழைவு வரையறை |
| Ambient Network | சூழலிசைவு வலைத்தளம் |
| Child Care Centre | குழந்தைகள் காப்பகம் |
| Default Application | உட்பொதி செயலி |
| Flash Support | பல்லூடகத் துணை |
| Flight Mode | கைப்பேசி முடக்கம் |
| Flip Phone | மடிப்புக் கைப்பேசி |
| Foam Roller | மெத்துருளை |
| Front Camera | முன்பக்கப் படவி |
| Global Challenge | உலகளாவிய சிக்கல் |
| Healthcare Ecosystem | நலவழிச்சூழல் அமைப்பு |
| Hortatory | ஊக்கவுரை |

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 166–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 166–ஆவது கூட்டம் 23.09.2024 ஆம் நாள் நடைபெற்றது.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 166–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், அகரமுதலி இயக்கக மேனாள் இயக்குநர் முனைவர் கோ. செழியன், முனைவர் ஆ. அரிமாப் பாமகன், மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர்.

இக்கூட்டத்தில் 156 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழுஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| Massage Gun | நீவு பொறி |
| Motor Command | இயங்கு கட்டளை |
| Multimedia Proficiency | பல்லூடக வல்லமை |
| Net Neutrality | இணைய நடுநிலை |
| Open Case | வெளிப்படை அணுகுமுறை |
| Physical Data Model | இயற்பியல் தரவு போல்மம் |
| Server Address | வழங்கன் முகவரி |
| Stereo Speaker | பரவிசை ஒலிப்பான் |
| Tender–Age Shelter | சிறார் தங்குமிடம் |

# பல்கலைக்கழகங்களில் பாவாணர் பெயரில் ஆய்விருக்கை! உலகத் தமிழ்க் கழகம் கோரிக்கை!







உலகத் தமிழ்க் கழகம் சார்பில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக 50 ஆண்டுகள் நிறைவுப் பொன்விழாவும், 7ஆவது பொது மாநாடும் 2024 செபுதம்பர் 28, 29 ஆம் நாள்களில் மிகச்சிறப்பாக நடைபெற்றன.

சேலம் வலசையூர், பெரியசாமி உடையார் திருமண மண்டபத்தில் நடைபெற்ற இம்மாநாட்டில், தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் தொடங்கப்பெற்று 50 ஆண்டுகள் ஆனதை முன்னிட்டுச் சிறப்பு அமர்வு நடத்தப்பெற்றது.

செங்கை செந்தமிழ்க் கிழார் பெயரில் அமையப் பெற்ற இந்த அமர்வில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககச் சிறப்பு நிலைப் பதிப்பாசிரியர் முனைவர். இரா.கு. ஆல்துரை தொடக்கவுரையும், பதிப்பாசிரியர் முனைவர் தி. பாலசுப்பிரமணியன் கருத்துரையும் வழங்கினர். பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் தோற்றமும் வளர்ச்சியும்" என்ற தலைப்பில் சிறப்புரையாற்றினார்.

இந்த மாநாட்டில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் தொடங்கி 50 ஆண்டுகள் நிறைவுற்றதை முன்னிட்டு அரசு அதனைப் பொன் விழா ஆண்டாகக் கொண்டாட முன்வந்திருப்பதற்கு நன்றியுடன் பாராட்டுத் தெரிவிக்கப்பட்டதோடு,

பாவாணர் பணியாற்றிய சேலம் அரசினர் கலைக் கல்லூரியில் அமையக் கோரப்பட்டிருக்கும் ஆய்வரங்கிற்கு மொழிஞாயிறு தேவநேயப்பாவாணரின் பெயர் சூட்ட வேண்டும்.

தமிழ்நாட்டில் உள்ள பல்கலைக் கழகங்களில் தமிழ்வளர்த்த மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், பாவலரேறு பெருஞ்சித்திரனார் ஆகிய அறிஞர்களின் பெயர்களில் ஆய்வு இருக்கைகள் அமைக்கவேண்டும் உள்ளிட்ட பல்வேறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# இணையவழியில் புதிய கலைச்சொற்கள் அறிமுகக் கூட்டம்





தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், புதிய கலைச்சொற்களை உருவாக்கி அவற்றை இணையவழியில் அறிமுகம் செய்வதற்குத் தமிழ்நாடு அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

அந்த அரசாணைக்கிணங்க 22.10.2024ஆம் நாள், சென்னை எழிலகத்தில் அமைந்துள்ள உணவுப்பொருள் வழங்கல் மற்றும் நுகர்வோர் பாதுகாப்புத்துறைக் கூட்டரங்கில் நடைபெற்ற புதிய கலைச்சொல் உருவாக்கக் கூட்டத்திற்கு அத்துறையின் இணை இயக்குநர் திருமதி ப. கலைவாணி அவர்கள் தலைமை

வகிக்க, உதவி ஆணையர் திருமதி எஸ். சாந்தா மற்றும் கண்காணிப்பாளர் திருமதி செ. ஜெயராணி ஆகியோர் முன்னிலை வகித்தனர். அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு.வே. பிரபு நோக்கவுரையாற்ற, பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் அவர்கள் திட்டம் குறித்து விளக்கவுரை ஆற்றினார்.

கூட்டத்தில், நாமக்கல்கவிஞர் வெ.இராமலிங்கனாரின் கொள்ளுப் பேத்தியும் உணவுப் பொருள் வழங்கல் மற்றும் நுகர்வோர் பாதுகாப்புத் துறையின் துணை இயக்குநருமான திருமதி இரா. மனோன்மணி அவர்கள் பேசுகையில், தமிழ்ச் சொற்களின் பயன்பாட்டைக் குழந்தை களிடமிருந்து தொடங்க வேண்டும். எங்கள் காலக்கட்டத்தில் தமிழுக்கு முக்கியத்துவம் கொடுத்து, தமிழ்ச் சொற்களையும் நம் முன்னோர்கள், அறிஞர் பெருமக்கள் எழுதி வைத்த பாடல்களையும் படித்து அவற்றை எல்லாம் உள்வாங்கிக் கொண்டு தமிழில் தனித்துவமாகப் பேச தொடங்கினோம். இப்பொழுது இருக்கின்ற பெற்றோர்கள் தம் பிள்ளைகள் ஆங்கிலத்தில் பேசினால் மட்டுமே மகிழ்ச்சி அடைகிறார்கள். அதற்காக ஆங்கிலவழிப் பள்ளியில் சேர்த்து, தமிழ்மொழிக்கு முக்கியத்துவம் தராமல் ஆங்கிலமொழிக்கு முக்கியத்துவம் கொடுத்து அதனை மேன்மைப்படுத்த விரும்புகிறார்கள். இதனால் குழந்தைகள் தமிழில் பேசுவது தடைபடுகிறது. இத்தகைய போக்குத் தவிர்க்கப்பட வேண்டும்.

எதிர்காலத்தில் தமிழ் நிலைநாட்டப்பட வேண்டுமானால் அது நம் குழந்தைகள் கைகள் தான் இருக்கின்றது. அதுமட்டும் இல்லாமல் நம் குழந்தைகளுக்குச் சிறு வயது முதற்கொண்டே அதாவது மழலைக் கல்வி தொடங்கும் பொழுதே அவர்களுக்குத் தமிழ்ச் சொற்களை அறிமுகம் செய்து தமிழ்மொழி மீது பற்றினை ஏற்படுத்தப்பட வேண்டும் என்ற கோரிக்கையை முன்வைத்து நன்றியுரை கூறினார். கூட்டத்தில் புலவர் வெற்றியழகன், முனைவர் இரா. கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன், திரு. சா. இராமு, நூல் மதிப்புரையாளர் திரு. மெய்ஞானி பிரபாகர பாபு, முனைவர் தி.பாலசுப்பிரமணியன்,உணவுப்பொருள் வழங்கல் மற்றும் நுகர்வோர் பாதுகாப்புத் துறையினர் உள்ளிட்டோர் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

Date : 09.10.2024

## தினமலர்

# ‘15 லட்சம் கலைச்சொற்களை உடைய வளமான மொழி தமிழ்!’

**சென்னை, அக். 9–**

“தமிழ், 15 லட்சத்துக்கும் அதிகமான கலைச் சொற்களை உடைய வளமான மொழியாக உள்ளது,” என, தமிழ் வளர்ச்சி துறை அமைச்சர் சாமிநாதன் தெரிவித்தார்.

தமிழ் வளர்ச்சி துறை சார்பில், அம்பேத்கர், ஈ.வெ.ரா., அண்ணாதுரை, கருணாநிதி ஆகியோரின் பிறந்த நாளுக்காக நடத்தப்பட்ட பேச்சுப் போட்டிகளில் வெற்றி பெற்ற, பள்ளி – கல்லூரி மாணவர்களுக்கான பரிசளிப்பு விழா, நேற்று நடந்தது.

பரிசுகளை வழங்கி அமைச்சர் சாமிநாதன் பேசியதாவது:

உலகில், புதிய புதிய தொழில்நுட்பங்கள் உருவாகின்றன. அது சார்ந்த கலைச்சொற்களும், பல்வேறு மொழிகளில் உருவாகின்றன. பழமையான மொழியான தமிழ், கால



சாமிநாதன்

மாற்றத்துக்கு ஏற்ப தன்னை புதுப்பித்துக் கொள்ளும் திறன் பெற்றது.

இதை உணர்த்தும் வகையில், செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி திட்ட இயக்ககம் சார்பில், ‘சொற்குவை’ என்ற திட்டத்தின் வாயிலாக, புதிய கலைச்சொற்கள் உருவாக்கப்படுகின்றன. அனைத்து துறைகளிலும் உள்ள கலைச்சொற்களுக்கு நிகராக, 15 லட்சத்து 33,669 கலைச்சொற்கள் தமிழில் உருவாக்கப்பட்டு உள்ளன.

அந்த சொற்கள், sorkuvai.tn.gov.in என்ற இணையதளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. தமிழ் பேச்சுக்கலைக்கு வளமான மொழி.

அதை வளர்க்கவும், தலைவர்களின் சாதனை சரித்திரங்களை, மாணவர்கள் அறியவும், அவர்களின் பிறந்த நாளில் பேச்சு போட்டிகள் நடத்தப்படுகின்றன.

இதில் பங்கேற்கும் மாணவர்களுக்கு, தேடுதல், சிந்தனை திறன்களுடன் வகைப்படுத்தி பேசும் திறனும் அதிகரிக்கிறது.

இவ்வாறு பேசினார்.

விழாவில், தமிழ் வளர்ச்சி துறை இயக்குனர் அருள், கார்க்கி ஆராய்ச்சி நிறுவனத்தின் நிறுவனர் மதன் கார்க்கி, செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி திட்ட இயக்குனர் பவானி உள்ளிட்டோர் பங்கேற்றனர்.

## தினமணி

# சொற்குவை தளத்தை அனைவரும் பயன்படுத்த வேண்டும்

### அமைச்சர் மு.பெ.சாமிநாதன்

**சென்னை, அக். 8:** பிறமொழிகளில் உள்ள கலைச் சொற்களுக்கு நிகராக தமிழில் கலைச் சொற்களைக் கொண்டு தமிழக அரசின் சார்பில் தாம் உருவாக்கப்பட்ட சொற்குவை தளத்தை தமிழறிஞர்கள், மாணவர்கள், ஆய்வாளர்கள் என அனைவரும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அமைச்சர் மு.பெ. சாமிநாதன் வலியுறுத்தினார்.

தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் நிகழாண்டு அம்பேத்கர், பெரியார், அண்ணா, கருணாநிதி ஆகியோரது பிறந்தநாளை முன்னிட்டு சென்னை மாவட்டத்தைச் சேர்ந்த பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கான பேச்சுப் போட்டி நடத்தப்பட்டது. இந்தப் போட்டிகளில் முதல் மூன்று இடங்களைப் பிடித்தவர்கள், சிறப்பு பரிசுகளுக்கு தேர்வு செய்யப்பட்டவர்கள் ஆகியோருக்கான பரிசளிப்பு விழா செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட அலுவலகத்தில் செவ்வாய்க்கிழமை நடைபெற்றது.

இதில் அமைச்சர் மு.பெ.சாமிநாதன் கலந்து கொண்டு 96 மாணவர்களுக்கு மொத்தம் ரூ.2.88 லட்சம் ரொக்கப்பரிசுகள், பாராட்டுச் சான்றிதழ் ஆகியவற்றை வழங்கினார். தொடர்ந்து செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சொற்குவை தளத்தை விரைவான சொல் தேடலுடன் அரசு தளத்தில் (sorkuvai.tn.gov.in) தொடங்கி வைத்தார்.



இதையடுத்து அமைச்சர் மு.பெ.சாமிநாதன் பேசியதாவது: தமிழ்மொழிக்குப் பெருமை சேர்ப்பது அதன் சொல் வளமே ஆகும்.

அறிவியல், தொழில்நுட்பம் உள்ளிட்ட கல்விப்புலத்தில் உள்ள 600-க்கும் மேற்பட்ட துறைகளில் புழங்கும் கலைச்சொற்களையெல்லாம் திரட்டி அவற்றுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வடிவமைத்து இணைய தளத்தின் பொதுவெளியில் வெளியிடுவதற்கான சொற்குவை தளம் 2019-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது.

தொடக்கத்தில் இந்த தளத்தில் மூன்று லட்சம் கலைச்சொற்கள் மட்டுமே இருந்த நிலையில் தமிழ் வளர்ச்சி மற்றும் அகரமுதலி இயக்ககம் மேற்கொண்ட முயற்சிகளின் காரணமாக அந்த எண்ணிக்கை தற்போது 15 லட்சத்து 33, 669- ஆக அதிகரித்திருக்கிறது. தற்போது தாம் உருவாக்கப்பட்ட சொற்குவை தளத்தை மொழி வளர்ச்சியில் பெரும் அக்கறை கொண்ட தமிழறிஞர்கள், தமிழ் ஆர்வலர்கள், மாணவர்கள் என அனைவரும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்றார் அவர்.

தொடர்ந்து தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் ந.அருள் பேசுகையில், மாணவர்களின் படைப்பாற்றலை வளர்ப்பதற்காக தமிழ்மொழி இலக்கியத் திறனறித் தேர்வு, திருக்குறள் முற்றோதல், கவிதை, பேச்சு உள்ளிட்ட போட்டிகள் என பல செயல்பாடுகளை தமிழ் வளர்ச்சித் துறை மேற்கொண்டு வருகிறது. இவற்றில் அதிகளவிலான மாணவர்கள் பங்கேற்று தங்களது திறமையை வெளிப்படுத்த வேண்டும் என்றார் அவர். இந்த நிகழ்ச்சியில் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறைச் செயலர் வே.ராஜாராமன், அகரமுதலித் திட்ட இயக்குநர் பவானி, கார்க்கி ஆராய்ச்சி நிறுவனத்தின் நிறுவனர் மதன் கார்க்கி, தொகுப்பாளர்கள் வேல்பிரபு, ஜெகாந்தி உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# தேவநேயப் பாவாணரின் மகன் தே.மணி (78) காலமானார்

**சென்னை, அக். 19:** மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின் இளைய மகன் தே. மணி (எ) மணிமன்றவாணன் (78) உடல்நலக் குறைவால் சென்னையில் சனிக்கிழமை (அக். 19) காலமானார்.



இவர், பாவாணரின் இறுதிக் காலம் வரை அவரின் தமிழ்ப் பணிகளுக்கு பக்கத் துணையாக இருந்தார். பாவாணரின் வாழ்க்கை வரலாற்றை 'பாவாணர் நினைவலைகள்' என்ற நூலாக எழுதி வெளியிட்டுள்ளார்.

இவருக்கு மனைவி தமிழ்ச்செல்வி, மகன் இமானுவல் தேவநேயன் ஆகியோர் உள்ளனர்.

இவரது உடல் அடக்கம் ஞாயிற்றுக்கிழமை மாலை நடைபெறவுள்ளது. தொடர்புக்கு: 98846 24774.

**முதல்வர் இரங்கல்:** மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் புதல்வரும், தமிழரசு இதழில் பணியாற்றி ஓய்வு பெற்றவருமான மணிமன்றவாணன் மறைவுற்ற செய்தியறிந்து மிகவும் வருந்தினேன். தமிழுக்குத் தொண்டு செய்த தேவநேயப் பாவணரின் வழித்தோன்றலான மணிமன்றவாணன் மறைவால் வாடும் குடும்பத்தினர், நண்பர்கள், தமிழ் ஆர்வலர்கள் அனைவருக்கும் ஆழ்ந்த இரங்கல் என்று முதல்வர் மு.க.ஸ்டாலின் வெளியிட்ட இரங்கல் செய்தியில் தெரிவித்துள்ளார்.

# 'குழந்தைகளுக்கு மழலைக் கல்வியிலிருந்து தமிழ் கற்பித்தல் அவசியம்'

**சென்னை, அக். 22:** குழந்தைகளுக்கு மழலைக் கல்வி தொடங்கும்போதே அவர்களுக்குத் தமிழ்ச் சொற்களை அறிமுகம் செய்து தமிழ்மொழி மீதான பற்றை ஏற்படுத்த வேண்டும் என இராமலிங்க அடிகளின் கொள்ளுப் பேத்தியும், உணவுப் பொருள் வழங்கல் மற்றும் நுகர்வோர் பாதுகாப்புத் துறையின் துணை இயக்குநருமான இரா.மனோன்மணி வலியுறுத்தினார்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் சென்னை எழிலகத்தில் செவ்வாய்க்கிழமை நடைபெற்ற புதிய கலைச்சொல் உருவாக்கக் கூட்டத்தில் அவர் பேசியது:

எதிர்காலத்தில் தமிழ் நிலைநாட்டப்பட வேண்டுமானால் அது நம் குழந்தைகளின் கைகளில்தான் உள்ளது. மழலைக் கல்வி தொடங்கும் போதே, அவர்களுக்குத் தமிழ்ச் சொற்களை அறிமுகம் செய்து தமிழ்மொழி மீதான பற்றை ஏற்படுத்த வேண்டும் என்றார் அவர்.

கூட்டத்தில் பங்கேற்ற உணவுப் பொருள் வழங்கல் மற்றும் நுகர்வோர் பாதுகாப்புத் துறைத் துறையினர், பிறமொழிச் சொற்களுக்கான தமிழ்க் கலைச்சொற்களை உருவாக்கிஇணையத்தின்வழியாக மக்களின் பயன்பாட்டுக்கு வழங்கும் திட்டத்துக்கு தொடர்ந்து தங்களின் பங்களிப்பை வழங்குவோம் என்றனர்.

மேலும், உணவுப் பொருள் வழங்கல் மற்றும் நுகர்வோர் பாதுகாப்புத் துறை என்ற பெயரில் கலைச் சொல்லாக்கப் புலனக்குழுவை தொடங்கி, அதில் தங்களை இணைத்தால், அதன்வழியே நாள்தோறும் துறைசார்ந்த புதிய கலைச்சொற்களை உருவாக்கிப் பகிர்கிறோம் என்றும் அவர்கள் தெரிவித்தனர்.

கூட்டத்துக்கு உணவுப்பொருள் வழங்கல் மற்றும் நுகர்வோர் பாதுகாப்புத் துறையின் இணை இயக்குநர் ப. கலைவாணி தலைமை வகித்தார். உதவி ஆணையர் எஸ். சாந்தா மற்றும் கண்காணிப்பாளர் செ.ஜெயராணி ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

முன்னதாக, அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் வே.பிரபு நோக்கவுரையாற்ற, பதிப்பாசிரியர் முனைவர் மா.பூங்குன்றன் திட்டம் குறித்து விளக்கவுரையாற்றினார். கூட்டத்தில் புலவர் வெற்றியழகன், நூல் மதிப்புரையாளர் மெய்ஞானி பிரபாகர பாபு உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.



# இடம் பொருள் கலைஞர் 90

**மகிழவன்**

பல்வேறு துறைகளில் தொலைநோக்குப் பார்வையுடன், முத்தமிழறிஞர் கலைஞர் செயல்படுத்திய திட்டங்கள், உருவாக்கிய கட்டமைப்புகள் குறித்து இந்தப் பகுதியில் பார்த்து வருகிறோம். இந்த வாரம் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககம்!







# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககம்!

இந்தியாவின் தென்பகுதியில் பேசப்படும் மொழிகள் சமஸ்கிருத மொழியிலிருந்து வேறுபட்ட மொழிக் குடும்பத்தைக் கொண்டவை என 1812–ஆம் ஆண்டில் ஆங்கில மொழியியலாளர் எல்லீஸ் கண்டறிந்தார். தொடர்ச்சியாக 1856–இல் கால்டுவெல் இக்கருதுகோளை வளர்த்தெடுத்து 'திராவிட மொழிக்குடும்பம்' என்னும் அடையாளத்தை நிலைப்பேறு கொள்ளச்செய்தார். 1905–ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட 'இந்திய மொழிகளைப் பற்றிய கணக்கெடுப்பு நிறுவனம்' கால்டுவெல் கருத்தை வலுப்படுத்தியது.

## அகர முதலித் திட்ட இயக்கம்

தமிழ் எந்த மொழியையும் சாராத, தனித்தியங்கவல்ல மொழி என்று நிறுவுவதற்குத் தமிழ்ச்சொற்களின் சொற்பிறப்பியலைத் தொகுக்க வேண்டிய தேவை ஏற்பட்டது. தமிழறிஞர்கள் ஞானப்பிரகாசர், மாகறல் கார்த்திகேயனார் போன்றவர்கள் இந்த முயற்சியில் ஈடுபட்டனர். ஆனால், முழுவதுமாக அப்பணியைச் செய்யவில்லை.

தேவநேயப் பாவாணர் சொற்பிறப்பியல் தொடர்பாக வேர்ச்சொற்கட்டுரைகள், முதல் தாய்மொழி போன்ற ஆய்வு நூல்களை வெளியிட்டார். அனைத்துத் தமிழ்மொழிச் சொற்களுக்கும் சொற்பிறப்பியல் கண்டு பிடிப்பதற்காக ஒரு துறையையே உருவாக்கித்தர வேண்டுமென்று தமிழ்நாடு அரசிடம் கோரிக்கை வைத்தார். அப்போது தமிழ்ப்பணி ஆற்றிக்கொண்டிருந்த அறிஞர் பெருமக்களும் பாவாணரின் கருத்தை வழிமொழிந்தார்கள்.

1974–ஆம் ஆண்டில் கலைஞர் முதலமைச்சராக இருந்தபோது, தமிழறிஞர்களின் கோரிக்கையை ஏற்று எக்காலத்திலும் தனித்து இயங்கும் வகையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கத்தைத் தோற்றுவித்து, அதன் முதல் இயக்குனராக மொழிஞாயிறு தேவநேய பாவாணரை நியமித்தார்.

தமிழ்மொழியின் ஒவ்வொரு சொல்லையும் அறிந்து சிறப்பாக வெளிப்படுத்தும் ஆற்றலைப் படைப்பாளர்களும், கல்வியாளர்களும் பெற வேண்டுமெனில், தமிழின் வேர்மூலங்களை வெளிப்படுத்தும் சொற்பிறப்பியல் அகராதி அவர்களுக்கு மிகவும் இன்றியமையாதவை.சொற்களே மொழிக்கு அடிப்படை. காலந்தோறும் மொழியில் சில சொற்கள் பொருள் மாறுபாடு அடையும்; சில சொற்கள் வழக்கொழியும்; சில சொற்கள் புதிதாக உருவாகும். இவை அனைத்தையும் தொகுத்துப் பதிவு செய்து அகரமுதலி வடிவில் வெளியிடுவதே மொழி வளர்ச்சிக்கான ஆக்கப் பணியாக அமையும். அனைவருக்கும் பயன்படும் வகையில், தமிழில் சொற்பிறப்பியல் அகரமுதலிகளைத் தொகுத்து வெளியிட வேண்டுமென்று விரும்பினார் முத்தமிழறிஞர் கலைஞர். இந்திய ஒன்றியத்தில் அகரமுதலித்துறையை ஓர் அரசே உருவாக்கி இயக்கி வருவது தமிழ்நாடு மட்டும்தான்.




## அகராதி உருவாக்கம்

தமிழின் சொற்களுக்குச் சொற்பிறப்பியலுடன் கலந்த பேரகரமுதலியை உருவாக்கும்பணி 1974–இல் தொடங்கி 2011–இல், 38 ஆண்டுகளில் 13,270 பக்கங்களில் 31 தொகுதிகளை உருவாக்கியபோது நிறைவுபெற்றது. இவ்வியக்ககம் 31 தொகுதிகளையும் சுருக்கி 1,000 பக்க அளவில் சுருக்கப்பதிப்பு ஒரே தொகுதியாகவும், 500 பக்க அளவில் வினைச்சொல் அகரமுதலி ஒரே தொகுதியாகவும் 2016–இல் உருவாக்கியது. 1300 மூலமான சொற்களை எடுத்துக்கொண்டு அதற்கான வேர்ச்சொற்களை மட்டும் எடுத்து 'வேர்ச்சொல் சுவடி' என்ற நூலையும், நல்ல தமிழ்ச்சொற்களை 1–ஆம் வகுப்பிலிருந்து 5–ஆம் வகுப்பு மாணவர்களுக்கு அறிமுகப் படுத்தும் வண்ணம் 'நற்றமிழ் அறிவோம்' என்ற நூலையும் வெளியிட்டது.

## மாதம் ஆயிரம் கலைச்சொற்கள்

சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்கத்திற்கென்றே தொடங்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் அதன் பணியை நிறைவு செய்தவுடன் தொடர்ந்து பல்வேறு அகரமுதலிகளை உருவாக்குவதுடன், கலைச்சொற்கள் உருவாக்கும் பணியையும் மேற்கொண்டு வருகிறது. ஒரு மாதத்திற்கு 1,000 கலைச்சொற்களை உருவாக்கும் இலக்குடன் செயலாற்றிவருகிறது.

**இணையம் வழியாக அடிப்படை இலக்கணம், கணினிவழித் தமிழ்ப்பயிற்சி, கல்லூரிகள் தோறும் விழிப்புணர்வுக் கூட்டங்கள் பயிலரங்கம் போன்ற நிகழ்வுகளின் வழியாக தமிழ்ப் பணி தொடர்கிறது.**

## சொற்குவை.காம்

அறிவியல் தொழில்நுட்ப முன்னேற்றக் காலத்தில் அனைத்துத் துறைகளுக்குமான கலைச்சொற்களைத் தமிழில் உருவாக்கத் தேவையுள்ளது. அந்த வகையில் உலகெங்கனும் பரவியுள்ள தமிழர்கள் அந்தந்த நாட்டிலும் பல துறைகளிலும் அறிஞர்களாகப் பணியாற்றுகின்றனர். அவர்கள் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் இயக்ககத்தில் உருவாக்கப்பட்ட சொற்களைச் 'சொல் வைப்பகத்தில்' சேகரித்து வைத்துள்ளது. அதற்குச் 'சொற்குவை' என்று பெயரிடப் பெற்றது. அதற்கென ஓர் வலைத்தளம் உருவாக்கப்பட்டு அது 'சொற்குவை.காம்' (www.sorkuvai.com) என்ற பெயரில் இயங்குகிறது. தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், மாணவர்கள், பொதுமக்கள் உள்ளிட்டோர் உருவாக்கித்தரும் பல்வேறு துறைகளைச் சார்ந்த புதிய தமிழ்க் கலைச்சொற்களை வல்லுநர்க் குழு ஆய்வு செய்து ஏற்பிசைவு வழங்கிய பின் சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டு, பொதுவெளியில் பயன்பாட்டுக்கு வழங்கப்பட்டு வருகிறது.

## தூயதமிழ் ஊடக விருது

தூய தமிழ்ச்சொற்களையும், காலத்திற்கேற்ற புதிய கலைச்சொற்களையும் பயன்படுத்தி மக்களுக்குச் செய்திகளை வழங்கும் ஓர் அச்சு ஊடகத்தையும், ஒரு காட்சி ஊடகத்தையும் இவ்வியக்ககத்தின் 'தூயதமிழ் ஊடக விருதும்', ஒவ்வொரு ஊடகத்திற்கும் ரூபாய் 50 ஆயிரம் பரிசுத்தொகையும், தங்கப்பதக்கத்தோடு தகுதியுரையும் வழங்கப்படுகிறது.

கல்லூரி மாணவர்களிடையே காணப்படும் சொல்படைக்கும் திறனை ஊக்கப்படுத்தவும், காலத்திற்கேற்பப் புதிய சொற்களை உருவாக்கிப் புழக்கத்திற்குக் கொண்டு வருவதற்காகவும், தமிழின் சொல்வளத்தைப் பெருக்குவதற்காகவும் நடைமுறை வாழ்க்கையில் இயல்பாகவே தூயதமிழில் பேசும் தகுதிமிக்கோரிலிருந்து ஆண்டுதோறும் மாவட்டத்துக்கு ஒருவர் என்ற வகையில் 37 பேரைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்குத் 'தூயதமிழ்ப் பற்றாளர் விருதும்' பரிசுத்தொகையும், சான்றிதழும் அரசால் வழங்கப்படுகிறது.

ஆண்டுதோறும் நடைபெறும் இந்த விழாவில் வீரமாமுனிவர் விருது-1, தேவநேயப் பாவாணர் விருது-1, நற்றமிழ்ப் பாவலர் விருது-2, சொல்லின்தாய் விருது ஆகிய 80 விருதுகளும் வழங்கப்பட்டு வருகின்றன.

## அடுத்த தலைமுறைக்கு

சொற்கள் ஏட்டளவிலும், இணையத்திலும் சேகரிக்கப்படுவது மட்டும் போதாது. அச்சொற்கள் பொதுமக்கள், மாணவர்கள், ஆராய்ச்சியாளர்கள் என்று பல நிலையிலும் சென்று சேர வேண்டுமென்பதற்காகக் கல்லூரிகள்தோறும் சொல்லாக்கப் பயிலரங்கம், விழிப்புணர்வுக் கூட்டங்கள், ஒன்றாம் வகுப்பு முதல் ஆராய்ச்சி மேற்கொள்ளும் மாணவர்கள் வரை தூய தமிழில் பேச விழிப்புணர்வுப் பயிற்சி வகுப்புகள் நடத்தப்பட்டு வருகின்றன.

...வலம் வருவோம்